ஸ்ரீ அம்பிகை துணை

காக்கையர் என்னும் புசுண்டமகாரிஷியால்

இயற்றிய

# காக்கையர் சிற்பம்

## புசுண்டர் சல்லியம்



இவைகளோடு

சீர்காழி உபாத்தியாயர்

**கோவிந்தசாமி ரெட்டியார்**

இயற்றிய

பொழிப்புரை, குறிப்பு அட்டவணை

இம்மூன்றையும் சேர்த்து

திரு. K. B. சீனிவாசன் அவர்களால்

பிழையற பரிசோதிக்கப்பட்டது.

---


**சண்முகானந்தா புக் டிப்போ**

67, T. K. முதலி தெரு,

சூளை, சென்னை-112.




(விலை ரூ 25

உ

சீர்காழி

லூத்ரன் மிசியோன் ஹைஸ்கூல்
தமிழ்ப்பண்டிதர்

# மு. சிதம்பரபிள்ளை அவர்கள்

இயற்றிய



நிலை மண்டில ஆசிரியப்பா

திருவளர் சுவர்க்கச் சிறப்பக் கன்மன்
பெருங்களி கொள்ளப் பெருந்தவத் தானே
யுருவங் கொண்ட வுயர்வுடப் புசுண்டன்
றருமணி சிற்பச் சல்லிய மாகு
மிருள்கேடு நூலுக் கியம்பரு மழகுற
மருங்கெடு பொழிப்பு மாருக் குறிப்பு
மிணையி லட்ட வணையுமான
நற்பொருள் கூட்டி நானிலத்தியாருஞ்
சிற்பநூலைத் தெளிவுறத் தெரிய
புத்தமு தோடுபுதைபொருள் காட்டி
யிச்சக மெச்சிட வச்சிறி வித்தனன்
மாமணி துளவப் பூமணி வண்ணன்
மூவடி கொண்ட சேவடி பணியு
மதியார் சோதி மாட காழிப்
பதிகோ விந்த சாமிபா வலனே.

# சிறப்புப்பாயிரம்

சீர்காழி
ஹிந்து ஹைஸ்கூல்
தமிழ்ப் பண்டிதர்
திருவாவடுதுறை

## சு. பொன்னோதுவார் அவர்கள்

இயற்றிய



நிலை மண்டில ஆசிரியப்பா.

சீர்தரு சுவர்க்கச் செல்வ னுடுதா
னேர்தரு மமர ரினத்தினுட் சிற்ப
கலையறி விசுவ கருமா வொருவனு
லுலைவிலா வண்மைபெற் றுளிர்ந்திடல் போவா

சிந்தமண் ணுலக மெழில்பெறு சிற்பச்
சுந்தர நாறெறி தூய்மையர் பலரா
விலகிய நாட்டினு மேற்றம துற்றே
பலவள முடைத்தெனப் பகர்ந்திடப் புவியிற்

சிற்பத் தொழின்முறை செம்மையாத்தெரிந்து
பற்பல ருஞ்செயும் பான்மைய தெய்தக்
காக்கையர் சிற்பங் கவின்பெறு புசுண்ட
ராக்கிடுஞ் சல்லிய மாமிரு நூலுக்

கிணையறு பொழிப்போ டியைகுறிப் பட்ட
வணியவை செய்தே மாண்புற் வச்சிற்
பதிப்பித் திங்குப் பாவல ரியாரு
மதிப்புற வென்றும் வயங்கிடச் செய்தான்

இலக்கண மதனோ டிலக்கிய நூலின்
புலக்கண நிறைந்த புனித சீலன்
கார்சூழ் சோலைக் காழிப் பதியிற்
சார்கோ விந்த சாமிநா வலனே.

உ

சீர்காழி ஆப்காரி கண்டிராக்ட்

## வி. குருசாமிபிள்ளை இயற்றிய

---

### நேரிசை வெண்பா

தத்துவத்தி னுகத் தகுதன்மை காட்டுவிப்பா
னெத்த சிற்ப மேபுசுண்ட னேதியதால் - சிற்பருக்காப்
பூவித்த கொள்ளும் பொருள்குறிப்போ டச்சிலிட்டான்
கோவிந்த சாமிகவிக் கோன்.

# காக்கையர் சிற்பம்

குறிப்பு:இஃதுபுசுண்டமகாரிஷிகாகவடிவமாயிருந்து மயனுக்கு உபதேசித்த சிற்ப சாஸ்திரம்

## கடவுள் வணக்கம்



எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

ஆதிமறை யோதுசீர் வேதன் வாக்கா
வறைந்தகலை யறுபத்து நான்கி லாய
சோதி வளர் சிற்பநூற்சிறப்ப மாகத்
தொகுந்தியான் வகுத்திட்ட செய்யு ளோங்க
நீதிபெரும் ஞாலமுத வளித்துக் காத்து
நீக்குமூ வுருவமீ ருருவ மொன்ரு
யாதியென வந்தமென நின்ற சோதி
யடியிணைகளெந்நாளு முடிமேற் கொள்வாம்

## நூற்பலன்

அயனுதி யண் முதலளித்தான செய்ய
வண்டத்திற் கொப்பவாய்ப் பிண்டந் தந்தான்
பயனுதி பிண்டத்திற் குவமை யாகப்
பண்பாருஞ் சிற்பநூ லளித்தான் மக்கண்
வியனுதியுடன்வாய்கண் மூக்குக் காது
விளங்குமைங் குணயாதி நகரங் கோவில்
மயனுதி மனையோடு கடாகங் கூபம்
வகுத்திட்டேனுலகிலுள பயனுஞ் சொல்வாம் 1

(பொழிப்புரை) ஹிரண்ணிய கருப்பன் ஆதியில் அண்டத்தை கிருஷ்டித்தான் அவ்வண்டத்திற்குச் சர்மாவன வாகப் பிண்டத்தை சிருஷ்டித்தான், அப்பிண்டத்திற்கொப் பாகச் சிற்பநூலைச் கிருஷ்டித்தான். மானிடரின், மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் ஐம்பொறிகளே, சிற்பநூலின் நகரம், கோவில், வீடு, தடாகம், கூப (என்றவாறு)

குறிப்பு:- மனிதர் அவையவமே நகரம், கோவில், வீடு தடாகம். கூடம் என்பவைகளாம் - இவ்வைந்திலொன்று குறைபடிவுபடினும் அங்கவீனருக்கொய்யெனப்படும், என்ப தாம்.

சொல்லொணு விலக்கணங்களைந்துங் கொள்வார்
சுகபோக தேவரென வாழ்வர் கான்கோ
வில்மூதலில் வைந்துமிலா ரலகை யாவ
சிலக்கணவீ டுள்ளவர்கள் மனையாள் மக்கட்
புல்லொணுப் பசுவாதி பூமி செல்வம்
புகழோடு தானடைவர் விடு கொள்வா
ரில்லிலார் வாழ்வுசுக மிழர்தே சாவ
ரிடமிலார் துறக்கவீ டெய்தி டாரே

(பொ-ரை) சுபலக்ஷணமான நகரம், கோவில், வீடு தடாகம், கூபம் இவ்வைந்துள் அடைந்தவர்கள் சுக போகதேவரென வாழ்வார், அவையில்லாதார் அலகை யாவார் பொருத்த நிமித்தத்தோடு சுபலக்ஷணமமைந்த வீடுள்ளவர்கள், இம்மையில்-மனையாள், மக்கள், பசு, பூமி, செல்வம் கீர்த்தி ஆகிய இவைகளோகு வாழ்ந்து. மறுமை யில் சுவர்க்க வீடுமடைவார்கள்; சுபலக்ஷணமூள்ள விடில் லாதவர்கள் இம்மையில்-தாமிருக்க இடம் பெருதவராய் வாழ்வையும்சுகத்தையும் இழந்திருந்து மறுமையில்-சுவர்க்க வீட்டையும் அடையார்கள் (எ-று)

குறிப்பு:- நகரமுதல் ஐந்தும்சுபலக்ஷணத்தோடு பெருத வர்கள் அவலக்ஷமான பேயைப் போன்று ஜிவிப்பார்கள்.
(எ-று)

## நூற்பயன் முற்றிற்று

# நூல்

## சிற்பாச்சாரியன் இலக்ஷணம்

எய்திடாப் பரவிடைய ரங்க வீன
ரெண்ணில்பிணி யாளர்குணக் கேடர் பொய்ய
ருய்திடாக் கலவியிலர் பொருமை யாள
ருற்றவதி காமிகொலை புரிய ரீனர்
பெய்திடா வரிஞர்சொல் வன்மை யில்லர்
பிணக்குளார் கணக்கில்லர் சினத்தின் மிக்கார்
வைதிடாக் கள்ளுண்ப ரிரெட்டாவர்
மனையாதி கோலிடினும் பாழா மென்னே 1

(பொழிப்புரை) அந்திய பீஜத்துக்குப்பிறந்தவர், தேவ பங்கமன்னவர் நோயுளார் நற்குணமில்லாதவர், பொய்யர் விந்தையில்லாதவர் பொருமையாளர் அதிககாமவிச்சை யுள்ளவர், கொலைஞர், தாழ்ந்தஜாதியார் தரித்திரர், வாக்குறுதியில்லாதவர் பிணங்குபவர் கணிதமறியாதவர், மிகுந்த கோபமுடையவர். சுருபானஞ்செய்பவர், இப்பதின்றுவரும் நகரமுதலைந்திடங்களுக்கும் முகூர்த்தாரப்ப முதலியன செய்யின் பாழ்படும் (என்றவாறு)

குறிப்பு-ஈனர் ஈசர்

என்னயுக தருமமிது கலியி னில்லா
தின்பமிகு நான்காய ஜாதி கொள்வர்
பன்னரிய சிற்பநூன் விவேக முள்ளார்
பத்தியுயர் சிந்தனைய ரறத்தின் மிக்கார்
நன்னகைய ராசார மூள்ளார் நூலோர்
நயமான வாக்குளர்தாஞ் சிற்பர் கண்டாய்
சொன்னவியர் மனையாதி கோலி னல்ல
சுகமான வாழ்வுண்டு ஜகமுங் கொள்வார் 2

[பொ-ரை] இக்கலிதத்தின்கண் ஜாதிபேதமின்றி எவ்வகை சாதியாகும் சிற்பாச்சாரியர்களாவார்கள் ஆதலால் அவர்கள் யாரெனில்:- மிருந்த அறிவுடையவர் பக்திசிந்தனையர் தருமசிந்தனையர், முகமவர்ச்சியுடையவர் ஆசாரமுள்ளவர் நூல்களை ஆராய்பவர் இதவசனமுள்ளவர் இவ்வெழுவரும் நகரமுதலேத்திடங்களுக்கும் முகூர்த்தாரம் முதலியன செய்யின் சுகமான வாழ்வடைந்து உலகவரசர்களாவார்கள் [எ-று]

குறிப்பு: இக்கலியுகத்தில் நான்கு வருணந்தாரும் தாழ்ந்த ஜாதியாரும் சிற்பர்களாவார்கள் ஏன்பதாம்

## முழக்கோள் அளவு முதலியன

கொள்ளுவா ரணுவெட்டைப் பஞ்சின் றூளாய்க்
குணிப்பர்கா ணெட்டுக் முனையு மெட்டாய்த்
தன்ளொணு மணலெட்டுக் கடுகு மெட்டாய்த்
தயங்குசீர் மூங்கிற்கு மரிசி டெட்டாய்
விள்ளுவா ரங்குலமோ ராறுகண்டரய்
வியனமேவு சரணுன்கு முழங்சோலென்ப
ருள்னாதி மயன்சிற்பங் குணவே தாங்க
முயர்மேவி வருமங்கக் கோரனுன் காமே

[பொ-ரை] அணு 8 கொண்டது பஞ்சின்றூள், பஞ்சிள் றூள் 8 கொண்டது மயிர்முனை மயிர்முனை 8 கொண்டது சிறுமணல் 8 கொண்டது கடுகு கடுகு 8 கொண்டது மூங்கிலரிசி மூங்கிலரிகி 8 கொண்டது அங்குலம் அங்குலம் 6 கொண்டது சாண் சாண் 4 கொண்டது முழம், அஃதே மூழக்கோலாம் அந்த முழக்கோல் மயனுங்கக்கோல், சிற்பாகங்க்கோல் குணுங்கக்கோல் வேதாங்கக்கோல் என நான்கு வகைப்படும் [எ-று]

குறிப்பு:- இஃது பூலோக கைலாயமென்னும் சிதம்பரம் நடராஜர் திருக்கோவிலிஸ்தண் கணிதப்படுத்தி வரைத்துள்ள தச்சு முழக்கோலாம்

ஆமேவு மயனுங்க மூவெட்டான
வங்குலமே சூத்திரர்த மனவு கண்டாய்
தரமேவு சிற்பாங்க மிருபத் தைந்தாய்ச்
சாற்றுசீ ரங்குலமும் வணிகர்க் காகும்
பாமேவு குணுங்கநதா னிருபத் தாறின்
பண்பான வங்குலமே மன்னர்க் காகும்
நாமேவு வேதாங்க மிருபத் தேழாய்
நவின்றதோ ரங்குலமு மறைவ லோர்க்கே

[பொ-ரை] 24 அங்குலமுழக்கோல் மயனுங்கமெனப் படும் இஃது சூத்திரருக்காம் 25 அங்குலமுழக்கோல் சிற்பாங்கமெனப்படும் இஃது வைசியருக்காம் 26 அங்குலமுழக்கோல் குணுங்கமெனப்படும் இஃது அரசருக்காம் 27 அங்குல முழக்கோல் வேதாங்கனெப்படும் இஃது பிராமணருக்காம் [எ-று]

குறிப்பு:- மயனுங்கம், சிற்பாங்கம் குணங்கம் வேதாங்கம் என்னும் இவைகளை முறையே கிடகு, பிரஜாபத்தியம் தனுர்முஷ்டி தனுக்கிரகம் என்றுசொல்லும் நூல்களுமுள்ளன இராஜாங்கத்துக்குரிய கஜம் என்னும் மூழக்கோலாலும் அல்லது வீட்டெஜமானன் கையாளந்த 4 சாண்கொண்ட முழக்கோலாலும் குழிமாறி பொருத்தங் காண்பாருமுளர்

ஓர்க்கொணு நகரமே குணுங்கங் கண்டா
யுயர்மேயு கோபுர லயங்களாதி
நீக்கொணு வேதாங்க மாட கூடம்
நிகரிலா மயனுங்கந் தடாகங்கூபம்
பார்க்கொணு சிற்பாங்க மிவைநான் கென்னப்
பருமிக்கோல் கொண்டே யளப்பர் கண்டாம்
தேக்கொணுப் பொதுவான சாணுன் காலே
செப்பு சீரிடங்கொள்ளல் மயனுங் கோலே 5

[பொ-ரை] குணுங்கமென்னும் முழக்கோலால் நகரத்தையளர்ப்பர் தோங்கமென்னு முழக்கோலால், ஆலயம் கோபுர முதலானவைகளை அளப்பர் மயனுங்கமென்னு முழக்கோலால், மாடகூட முதலானவைகளை அளப்பர், சிற்பாங்க

மென்னும் முழங்கோலால், தடாகம் கூபமுதலானவைகளை அளப்பர். இந்நான்கிற்கும் பொதுக்கோல் 4 சாண்கொண்ட மயனுங்கமெனப்படும்.

குறிப்பு:: மயனுங்கமென்னுங்கோல், தச்சு முழமாம் யாகசாலை முதலானவைகளை அங்குஷ்டாங்குல முழக் கோலாலளப்பர் (அங்குஷ்டாங்குல மென்பது கட்டை விர லங்குலமாம்)

கோலமுய ரிருப்புக்கோண் மூங்கி லாச்சாக்
 ருணமுள்ள தேங்குதிர வேங்கை செய்ய
ஞாலமுய ரைந்து முறையாக விண்ணோர்
 நவையிலிரு பிறப்பாள ருலக வேந்தர்
சீலமுள வணிகர் சூத்திரர்கள் கண்டாய்
 செப்பொணு நீசர்க்கு புளிமா வென்பர்
தாலமுய ரளவுகோ லெவர்க்கு மொம்பச்
 சந்தனம் வில்வமிவை கொள்வார் நல்லோர்

(பொ-ரை) இருப்புக்கோல், தேவர்களுக்காம் மூங்கில் பிராமணர்க்களுக்காம் ஆச்சா, உலகாள்பவர்களுக்காம் தேக்கு, வைசியர்களுக்காம் உதிரவேங்கை, சூத்திரர்களுக் காம், புளிமா, நீசர்களுக்காம், இந்த ஐந்துவகை ஜாதியா ருக்கும், பொதுக்கோல் சந்தனம் வில்வம் எனச்சொல்லப் படும் (எ-று)

குறிப்பு:- குதக்கு, கருங்காலி, மூங்கில் இம்மூன்றும் பொதுக்கோலெனக் சொல்வாறுமுளர்

## சகுண பலன்

நல்லபூ மாலைமண வோலை வண்ணு
 னன்மேளங் கரும்பாடை யிரட்டைப் பார்ப்பார்
மலசூத்தி ஞெருவன் கணிகை நல்லார்
 வலங்கலப் பெண்கும்பந் தயிர்பால் பூகம்

புல்லுநீர் கட்குடஞ் செந்தே னன்னம்
பொரிதீப் மெரிவன்னி குதிரை யானை
பெல்லைதேர் செந்நெல்கனி மன்ன னுவா
மிறைறச்மீ னெதிராக வருத னன்ரும்.

(பொ-ரை) பூமாலை, மணவோலை, வண்ணான், மேள வாத்தியம், கரும்பு, வஸ்திரம், இரட்டைப் பார்ப்பார் ஒற்றைச் சூத்திரன், தாசிகன், சுமங்கலி, பூரணகும்பம், தயிர் பால், கருங்குரங்கு, நீர்க்குடம், கட்குடம், தேன், சோறு, நெற்பொரி தீபம், எரியக்கினி, குதிரை யானை, இரதம் நெல் பழம், அரசன், பசு, இறைச்சி, மீன் இவைகள் எதிராகவரில் நன்று (எ-று)

குறிப்பு:-கன்னிகை பிணம், மணக்கோலங் கொண்ட புருடனும், பெண்ணும், சுபலக்ஷண தெய்வம், இவைகள் எதிரர்கவரினும் நற்பலனைத் தரும் (எ-று)

நன்றிகிளி செம்போத்து வேங்கை கொக்கு
நரியோணுன் மயில் காகம் புழுகு பூனை
துன்றுபசு முயனரையா னெருமை கோழி
துனிகாலை வலமேக தலமா மிக்க
மன்றுதனை மான்டேரை கருடன் பூனை
வல்லதா யுடும்பாந்தை கழுகு கோட்டான்
பொன்ருத கருவாலி குரங்கு கீரி
புகல்காடை மூஞ்சூறு விடத்தி னன்றே 8

(பொ-ரை) கிளி, செம்போத்து, புலி, கொக்கு, நரி ஓணன், மயில். காகம், புழுகுபூனை பசு, முயல் நரையான் (நாரை) எருமை, கோழி, ரிஷபம், இவை இடத்தினின்று வலத்திற்செல்லில் நன்ரும், கலைமான், டேகை, கருடன் பூனை நாய் உடும்பு, ஆந்தை, கழுகு, கோட்டான், கரிக்குருவி குரங்கு, கீரி, காடை இவை வலத்தினின்று இடத்திற் சொல்லில் நன்று (எ-று)

குறிப்பு:- குரங்கு, பாம்பு இவை வலத்தில் வரினும் அணில் இடத்தில் வரினும் நன்றென்பாரும் எதிர்வலம் இடம், இம்மூன்றிடத்தும், குரங்கைக் கர்ணன் உத்தம பலனைத் தருமென்பாருமுளர்

நன்ருகா விதவை கோமுட்டி செக்கா
　　ஞவிதன் குருக்கனே யாளன் செட்டி
முன்றிலுய ராண்டிஜடவேடன்
　　மண்வெட்டி யாவுதோ லெலும்பு தட்டான்
துன்றுமா யுததாரி குருடன் பித்தன்
　　றூமமிழு தெண்ணெய் புது பானை சாணு
ரொன்ருத புலைஞனீ னங்க வீன
　　னுயர்விலா வலைஞனிவ றெதிரேற்றதாம் 9

(பொ-ரை) விதவை கோமுட்டி, வாணியன், நாவிதன் குருக்கன் நோயாளன், செட்டி, ஆண்டி, ஜடதாரி, வேஷதாரி, மண்வெட்டி, பாம்பு, தோல், எலும்பு, தட்டான், ஆடயுத்தாரி, குருடன், பித்தன், புகை, நெய், எண்ணெய் புதுப்பானை சாணுர், புலைஞன், அங்கவீனன், வலைஞன் இவர்கள் எதிராகவரில் தீயபலனைத்தரும் (எ-று)

குறிப்பு:- வேடம், காளி, பிடாரி முதலியபலிகொள்ளும் தெய்வம் பிணப்பறை பூணுனூல்தரித்தவன் இவர்கள் எதிராகவரினும் காரிய விக்கினமாம்

தீதான நாய்விட்டை யிட்டா ஞசந்
　　தியுண்ணு மெண்ணெயுள தலையன் வந்தான்
மீதான ஐந்துக்கள்யுத்தல் காண
　　வீடின்றிக் காடெய்தி வாசஞ் செய்வன்
சோதான ஐந்துக்கள் புணரி நீங்காக்
　　குலக்கேடும் பகையாதி யடைவன் கண்டாய
மாதவிடாக் கொண்டவளான் வருமை மிக்க
　　மருந்துவனு னீங்காத பிணியுண்டாமே 10

(பொ-ரை) தனக்கு எதிரில் நாய் மலங்கழித்தால், விக்கினமாம் எண்ணெய்த்தலையன் வந்தால் அக்கினி பந்தம் ஜந்துக்கள் யுத்தம் செய்வதைக்காணில் பரநேசம், செல்வன் மிருகங்கள் புணர்வதைக்காணில் மானக்கேடும், பகையுமுண்டாம் தூரஸ்திரீயைப்பார்க்கில் தரித்திரமாஞ் வைத்தியனுல் நீங்காத பிணியுண்டாம் [எ-று]

குறிப்பு:- நிர்வாணதெய்வம், மனிதர்கள் யுத்ததஞ் செய்தல் இவைகளைக் காணினும் மனச்சஞ்சலம் விரோதம் உண்டாகும்

---

## வார பலன்

ஆமேகேண் ஞாயிருேர் கண்ணே யுள்ளா
 னளித்திடா ஞுக்கமே களங்கன் பொன்னுேன்
பாமேயு சுங்கன் மா லிருகண் ணுள்ளார்
 பணமிக்க தனமாயு ளளிப்பர் கண்டாய்
நாமேவு குருடர்சாண் முடவன் செவ்வாய்
 நயனமே யில்லைதிக் கள்வ ரொன்னுர்
பூமேவு பகைபாடு கொடுப்பர் கண்டாய்
 பொய்க்காத காக்கேயன் வாக்குத் தானே 11

[பொ-ரை] ஞாயிறு-ஒரு கண்ணுள்ளான், இதில் செல்வமீயான் திங்கள், வியாழன், வெள்ளி, புதன், இவ் வொவ்வொருவரும் 2, கண்ணுள்ளார்கள், இவர்கள் தனம் ஆயுள் முதலியவைகளைத் தருவார்கள் சனி, செவ்வாய் இவ்விருவரும் கண்ணில்லாக் குருடர், இவர்கள் அக்கினி பயம், திருடர்பயம் பகைவர்பயம் இத்தன்மையானகேட்டைக் கொடுப்பார்கள் (எ-று)

குறிப்பு:- ஞாயிற்றுக்கிழமை மந்திம பலனென் பாரும் சனிக்கிழமையில் குடிபுக நன்றென்பாருமுளர்

## திதி பலன்

தானமூன் றைந்துபத் தோங்கு பன்மூன்
 ருனதிதி நன்றுதன லாபமுண்டா
மானமிரண் டேழுபத் தொன்று பூர்வ
 மதிதானு மத்திபத்தி னன்று கண்டா

யீனமொன் ருருநான் கெட்டொன் பானு
மெய்துபணி ரெண்டு பதிநான் குவாயுங்
கானமுயர் வேடர்குலந் தவந்தி னல்லார்
கதிகொள்வர் மற்றோர்கள் பதியில்லாரே

(பொ-ரை) திரிதிகை பஞ்சமி, தசமி, திரயோதசி இவை உத்தமத்தினன்று இதில் தனலாபமுண்டாகும் துதிகை, சப்தமி, ஏகாதசி, பௌர்ணமி இவை மத்திபத்தி னன்றும். பிரதமை, சஷ்டி சதுர்த்தி, அஷ்டமி நவமி, துவாதசி, சதுர்ந்தசி அமாவாசை இவ்வெட்டும் அதமமாம், இவை வேடர், இருடிகள் இவர்களுக்கு நற்பலனைத் தரும் (எ-று)

குறிப்பு:- ஏகாதசி பௌர்ணமி இவ்விரண்டையும் அதமமெனக் கொள்வாருமுளர்

## நட்சத்திர பலன்

எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

வேறு சந்தம்

இல்லமரு ளசுபதிநா ளுரோகணியு மவிட்ட
மினியதிரு வோணமூன் றுத்திரக்க ளத்தஞ்
செல்லவருஞ் சோதியுடனநுடநாட் புநர்தன்
தேடரிய மிருகசிரம் பூசமுடன் கடைநாந்
மல்லுயர் சித்திரையுஞ் சதையத்தி னல்ல
மகத்தாள் வீரெட்டி னுடுமிக்க சுகமான்
தொல்லையிலா தனலாப மிகவுண்டு கண்டாய்
சொல்லாத பதினொன்றும் பொல்லாத நாளே (13)

(பொ-ரை) அசுபதி, உரோகணி, அவிட்டம், திருவோணம், உத்திரம் உத்திராடம், உத்திரட்டாதி, அஸ்தம், சுவாதி, புநர்பூசம், மருகசிரம், பூசம் இரேவதி, சித்திரை

சதையம் இப்பஞ்றும் நன்ரும். இவைகளிற் செல்வலாப மிகவுண்டாகும், பரணி, கார்த்திகை, திருவாதிரை ஆயிலியம் மகம், பூரம், விசாகம் கேட்டை, மூலம் பூராடம் பூரட்டாதி இப்பதினொன்றும் பொல்லாத நட்சத்திரங்கள் (எ-று)

குறிப்பு:- மிருகசிரம், புநர்பூசம், உத்திரம் சித்திரை, உத்திராடம், அவிட்டம் இவை உத்தம நட்சத்திரங்களாயினும். காலற்ற தலையற்ற, உடலற்றநாட்களென விலக்குவாரு முளர் விசாகம், மூலம் இவ்விரண்டையு மத்திப பலனுக் கொள்வது முண்டாம்.

## யோககரண பலன்

நான்மூன்றே டிரண்டுநான் கைந்தெட்டுஞ் சப்த
நலமான பதினொன்றும் பனிரண்டு மரிஷ்ணங்
கோன்மேவு பதினாறும் பதினெட்டுஞ் சிவனின்
குலவுபின்னூரேடுந் தனலாப மிக்க
மாண்பான மும்மூன்றுந் தீதென்பர் யோகம்
வனசைபவ பாலவங் கௌலவந்தைதுலைப்
பாண்மேவு முயர் கசசை யிவ்வாறும் நன்று
பண்பிலா மற்றைந்துந் தீதென்பர் நல்லோர் 14

(பொ-ரை) ஆயுஷ்மான் பிரீதி, சௌபாக்கியம் சோபனம், திருதி சுகர்மம், விருத்தி துருவம், அரிஷ்ணம், சித்தி, வரியான், சிவம், சித்தம் காத்தியம், சுபம், சுப்பிரம், பிரர்மம், ஐந்திரம் இப்பதினெட்டு யோகங்களும் உத்தமம், இதில் தனலாபமூண்டாம் விஷ்கம்பம் அதிகண்டம் சூலம் கண்டம், வியாகாதம், வச்சிரம், விதிபாதம், பரிகம், வைதிருதி, இவ்வொன்பது யோகங்களும்தீதாம், வனசை, பவம், பாலவம், கௌலவம் தைதுலை, கரசை இவ்வாறு கரணங்களும் நன்றும், பத்திரை, சகுனி சதுஷ்பாதம். நாகவம், கிமுஸ்துக்கினம் இவ்வைந்து கரணங்களும் தீதான பலனைத்தரும் (எ-று)

குறிப்பு:- அரிஷ்ணயோகத்தை அதமமெனவும் பத்திர வர்கரணத்தை உத்தமமெனவும் கொள்ளுவாரு முளர்

---

## இராசி பலன்

எண் சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

நல்லதோ ரிடபமரி விடத்தேள் கும்பம்
நடுதிர முத்தமத்தினன்று மிந்த்ரன்
சொல்லாருஞ் சுகமுளான் மேபம் ஞெண்டு
சுருக்கோலு மக்திபத்தி னன்று காணு
வில்லென்னுந் தனுசுமீன் மிதுனங் கன்னி
மேவுமிவை நான்குமே யதமங் கண்டாய்
வல்லபொருளுசமா மிந்திர ஞக
மதித்தாலும் நீங்கொணுத் தரித்திர னுவன்

[பொ-ரை] இடபம் சிங்கம், விருச்சிகம். கும்பம் இந்த ஸ்திர ராசிகள், 4ம் உத்தமத்தில் நன்றும், இவைகளில் இந்திரபோகத்தை அனுபவிப்பார்கள் மேஷம் கர்க்கடகம் மகரம், துலாம் இச்சரராசிகள், 4-ம் மத்திபத்தில் நன்றும், தனுசு, மீனம், மிதுனம், கன்னி இவ்வுபராசிகள், 4-ம் அதமமாம். இவைகளில் இந்திரனுக மதித்தாலுங் கொடிய த்ரித்திரனுவன் [எ-று]

குறிப்பு:- இடபம், கடகம்,சிம்மம்,துலாம், மீனம் இவை உத்தமமென்றும், மிதுனம் கன்னி, மகரம், இவை மத்திப மென்றும் மேஷம், விருச்சிகம், தனுசு, கும்பம் இவை அதம மென்றுஞ் சொல்லும் நூல்களு முளளன

### மாத பலன்

வான்மேடந் தீதல்ல கும்பம் பொல்லா
வறுமையாம் வீணேயே கடகங் கன்னி

வின்மீன் மைந்துமே மனையாள் மக்கள்
மிகுநோயான் மாய்ந்திடுவர் தனமு நாசம்
பொன்மேவு மிடநட்டஞ் சேயே கோனமா
பொதிதுலா மகரந்தேளைந்தும் நன்று
மன்மேவு தனலாபம் பூமி லாப
மனைமக்க ளதிபோக மீயுந் தானே 16

[பொ-ரை] சித்திரைமீ நன்மைதரும், மாசிமீ தரித்திர மாம் ஆனி ஆடி, புரட்டாசி மார்கழி, பங்குனி இவ்வைத்து மாதங்களும் தீயவாம் இவைகளில் மனைவி மக்கள் இறப்ப தோடு பொருளும் பூமியும் நட்டமாம். வைகாசி, ஆவணி ஐப்பசி தை கார்த்திகை இவ்வைந்து மாதங்களும் நன்றும் இவைகளில் தனம், பூமி மனைவி, மக்கள் இவைகளோடு சுக போகத்தை அனுபவிப்பார்கள் [எ-று]

குறிப்பு:- மாசிமீ மத்திப பலனைத்தரு மெனச் சொல்லு நூல்களு முள்ளன

## முகூர்த்தங் கொள்ளல்

தானதிதி வாரமுலு கரணம் யோகஞ்
சந்திராட்டகமோரை கிரக நோக்கு
மானவலி சுபயோகஞ் சகடயோக
மன்னுதாரா குளிக னிராகு கேது
கானமுள திவியேம கண்டன் சூன்யன்
கவிமூடம் யோகினியுஞ் சகுனம் விட்டிப்
பானமூறு பரிவேடங் கிராணம் பொல்லாப்
பஞ்சகமும் நீக்கிநன் முகூர்த்தங் கொள்வாய் 17

[பொ-ரை] திதி, வாரம் நட்சத்திரம் கரணம் யோகம் சந்திராஷ்டகம் இராசி, கிரகபார்வை கிரகவலி சுபாசுட யோகம், சகடயோகம், தாராபலன் குளிகன் இராகுகாலம் கேதுகாலம் தியாச்சியம் எமகண்டன் சூன்யம் சுக்கிரமூடம்

யோகினி, சகுனம். விஷ்டி. பரிவேடம், கிரகணம் பஞ்சகம் இவைகளின் அசுபங்களை நீக்கி சுபமுகூர்த்தங்களைக் கொள் வதே உத்தமம் (எ-று)

கொள்ளுவா ரரிக்கு நான்கு குளிர்மதி யொன்று சேய்க்குத்
தெள்ளியா வைந்து பந்தி சீரிரண் டிறைவ னும்
ஒள்ளிய புகர்க்கு மூன்று முயர்சனி யேழா மின்பக்
கள்ளிகேள் முகூர்த்த மப்பாற் கருதுவர் கேது காலம்

---

## நகரலக்ஷணம்

---

கொள்ளுவாய் நகரமைந் தைந்து பங்காய்க்
 கொண்டைபின் னடுத்தானந் தேவர் கோவி
றள்ளுவப யுருத்திரனுர் காவ லான
 சனிவாயு தேயுவோடு நிருதி மூலை
யுள்ளான் வீதியொரு நான்கும் பார்ப்பா
 ருற்றவெளி வீதிதெற் கரசர் மேற்கி
னல்லாரும் வணிகரே குணக்கிற் கங்கை
 நன்மக்கள் வடபாலிற் சூத்திர ராமே

(பொ-ரை) நகரத்திற்காக அளந்தகுழியை 25 பாகஞ் செய்து அதனடுத்தானத்தை தேவராலயமாகக் கொள்க ஈசானியம், வாயு அக்கினி, நிருதி இன்னுன்கு மூலைகளும், உருத்திரனுர்காவல் உள்வீதி நான்கும் பிராமணர்களில்லம் வெளிவீதிகள் நான்கில் தெற்கே அரசர் மேற்கில் வணிகர் கிழக்கில் வேளாளர் வடக்கே சூத்திரர்கள் (எ-று)

(பொ-ரை) இஃது சிதம்பராலப நகரமாம் நான்கு மூலைகளிலும், காளி, பிடாரி, வீரன், மூதலிய பலிகொள்ளும்

தெய்வங்களையும், வெளிவடக்குவீதியில் கீழ்பக்கம் சூத்திரர் களையும் மேற்பாகம் தாசிகளையும் அமைக்கலாம் தேவராலய நகரத்திற் கண்டதைப்போல் கோவில் தடாகம் மயானம் இவை முதலானவைகளை அமைத்துக்கொள்ளவும் சிதம்ப ராலய நகரத்தை சிற்றாராயமைப்பதே இலக்ஷணமா பேறாராயமைவிப்பதுமுளவாம்,

## சிதம்பராலய நகரஸ்தாபன சக்கரம்

தென்மேற்கு மேற்கு வடமேற்கு

தெற்கு | வடக்கு

| | | | | |
|---|---|---|---|---|
| [illegible] | வை | சியர் வீ | தி | [illegible] |
| | [illegible] | அந்தணர் வீதி | [illegible] | |
| [illegible] | [illegible] | தேவ ராலயம் | [illegible] | [illegible] |
| | [illegible] | [illegible] | [illegible] | |
| [illegible] | வே | ளாளர் | வீதி | [illegible] |

தென்கிழக்கு கிழக்கு வடகிழக்கு

ஆமருவு நகரமெட் டெட்டு கூறு
யணிவித்த நடுநான்கும் பிரமத் தானம்

பூமருவு தான்கான மூலை கண்டம்
பொல்லாது வெளிநான்குந் தேவர் காவல்
மாமருவு வேதியர் தம் வீதி யப்பான்
மணமிக்க வுள்வீதி தென்பால் வேதம்
ரமருவுந பிறப்பாளர் குடக்கின் மன்னர்
நனிவடக்கு வைசியர்கீழ்த் திசைவேளாளர்

(பொ-ரை) நகரத்திற்காக அளந்த குழியை 64 பாகஞ் செய்து அதினடுத்தானம் 4ல் தேவராலயங்கொள்க அக்கினி நிருதி, வாயுஈசானன் இந்நான்கு மூலைகளும் உருத்திரனர் காவல் பிர்மஸ்தானத்திற்கு வெளிவீதி நான்கிலேயும் அந்தணரில்லம் இது தேவர்காவல் உள்வீதி நால்ன்கி தெற்கே பிராமணர்கள் மேற்கில் அரசர் வடக்கில் வைசியர் கிழக்கில் வேளாளர் (எ-று)

குறிப்பு:- இஃது தேவராலய நகரமாம் நான்கு மூலை களிலும் காளி, பிடாரி, வீரன் முதலிய பலிகொள்ளுந் தெய் வங்களே நிருமித்தல் வேண்டும் [எ-று]

வேண்மருவு மூன்றான வீதி மேல்பான்
விளங்குகடை வீதிமுத லெல்லாங் கொள்க
பாண்மருவு குணபாலிற் சூத்திரர் கண்டாய்
பண்பான தென்பாலிற் பலருங் கொள்வார்
நீண்மருவும் வடபாலிற் கணிகை நல்லார்
நிகரிலா வீதியுள நகரங் கண்டாய்
பூண்மருவு தனமாத ரெண்மர் நீங்காப்
பொன்னகர மாமென்ப ரின்னஞ் சொல்வாம் 20

[பொ-ரை] மூன்றான வெளிவீதி நான்கில்மேற்கே கடை வீதிமுதலானவை கொள்க கிழக்கில் சூத்திரர் தெற்கில் பல ஜாதியாரில்லம் வடக்கில் தாசிகள், இவ்வாறு நகரம்

அமைவிக்கில் அஷ்ட இலக்குமிகளும் நீங்காததெய்வலோக மெனச்சொல்லுவார்கள் மேலுஞ் சொல்வாம் (எ-று)

குறிப்பு:- பலஜாதியார், குண்டகர் கோளகர் முதலிய ஜாதியார்.

சொல்வானுத் தானமா மீச னுன
சுவாமி மூன் பிடபனே யல்லான் முன்னே
னல் லதிரு பாற்பிள்ளை கோவி லல்லா
னயமிக்க கந்தவேள் கணங்க ணன்றுஞ்
செல்வமிகுந் துர்க்கையின் பக்க மல்லாற்
சிவலிங்க மிதுவலாற் சூன்யமாதல்
பல்குவள மிகநன்று தேவர் கூடிப்
பண்ணிவிளை யாடுமூரின்னங் கேண்மின் 21

(பொ-ரை) பிரமஸ்தானத்தின் சந்நிதிக்கடையில் நந்தி தேவர் அல்லதுவிநாயகர் கோவிலைக்கொள்க வலம் இடம் இருபால் விநாயகர்கோவில் அல்லது சுப்பிரமணியர் கணங்களைக்கொள்க பின்னால் துர்க்கை அல்லது சிவலிங்கம். இஃதன்றி சூனியமாதலும் நன்றும் இவ்வாறல்மந்தநைகரத்தின்கண் தேவர்களே நிர்த்தனஞ் செய்வார்கள் (எ-)

குறிப்பு:- வலத்தில் விநாயகரும் இடத்தில்மகாலக்ஷிமியையும் நிருமித்தலு முளவாம்

மின்னுருந் தீமூலை யையன் பந்தி
வீரனிவை யல்லாது சமாதி பீடந்
தொன்னுருந் தடாகமிவை யையன் பந்தி
துணிவான நிருதிமுனி கருப்ப னல்லான்
மன்னுரு தெய்வமிவை நன்று காண்க
வாயுதனிற் காளியலான் மாரி கோவிற்
பன்னுருஞ் சனிதிசையிற் பிடாரி யல்லாற்
பன்னகஞ்சேர் மாரியுடன் வீரன் னுனே. 22

(பொ-ரை) நகரத்தின் அக்கினிமூலையில் ஹரிஹர புத்திரன் வீரன், அல்லது சமாதிபீடம், தடாகம் இவை இருத்தல் நன்ரும், நிருதிமூலையில் ஹரஹரபுத்திரன் முனி, கருப்பன், அல்லது மன்னார்சுவாமி இவர்களைக் கொள்க வாயுமூலையில் காளி அல்லது மாரிகோவில், ஈசானியமூலை யில் பிடாரி அல்லது மாரியம்மன் வீரன் இவர்கள் கோவிலி ருப்பது நன்று (எ-று)

குறிப்பு:- ஈசானியத்தில் அன்னசத்திரம் மந்திரோப தேசமடம் இவைகளுமமைக்கலாம்

தானன வருணனீ சானன்மூலைத்
தடமேவ நன்றுவடக் கேமன் வாயு
மானதீ வருணனைத் தான வொன்றின்
மயாளமே கொள்கபாம் பணையான் கோவி
லானமா ருதியலாற் கருட னேக்கா
லமைந்ததே நன்றுபூவுலகின் மிக்கத்
தானன காலத்தோ ரெண்ணும் வண்ணஞ்
சமைவிப்போ ரொப்பிலாச் சிற்பி யாமே. (27)

(பொ-ரை) மேற்கிலும், வடகிழக்கிலும் தடாகங் கொள்க வடக்கு தெற்கு, வடமேற்கு, தென்கிழக்கு, மேற்கு இவ்வைந்திலொன்றில் மயானங்கொள்க இஃதன்றி பிரமஸ் தானம்-விஷ்ணுவாலயமாயின், சந்நிதிக்கடையில் அநுமார் அல்லது கருடன் கோவிலைக்கொள்க உலகத்து இக்காலத் துள்ளோர் மதிக்கும் விதம் செய்வோரே சிற்பாச்சாரியாக ளாவார்கள் (எ-று)

குறிப்பு:- வாயு, குபேரன் இவ்விரண்டு திசையிலு மயானம் அமைத்தலே உத்தமமாம், தெற்கு தென்கிழக்கு, மேற்கு இவை மத்திப மாமெனக்கொள்க.

குறிப்பு:- தேவாலயநகரத்திற்கு, வடக்கு, தெற்கு வட மேற்கு, தென்கிழக்கு மேற்கு இவ்வைந்திலொன்றில் மயானங்கொள்க பிர்மத்தானம் விஷ்ணுவாலயமாயின் சந்நிதிக் கடையின் ஹநுமார் அல்லது கருடன்கோவிலை நிருமித்தல் வேண்டும் எவ்வகை மத பேதமுளராயினும் அவர்கள் எண்ணமும் சிற்பநூலினியல்பும் ஒருமைப்பட, நகராதி கூப்மீருய் அமைவிப்போரே சிற்பாச்சாரியார்களாவார்கள், என்றறிக

## ஆலய லக்ஷணம்

ஆமின்னஞ் சொல்வேன்கேன் பிரமத்தான
மறிந்தநீ யையைந்து பாகஞ் செய்வாய்
தாமிக்க நடுத்தான மீசன் கோவில்
சனிமூலை கண நாத னிருதி தன்பா
னேமிவளர் பிள்ளையார் கோவிற் றியி
னிலையான தென்றுமிலை யுதிக்கிற்
பூமின்னு நவக்கிரக மல்லாற் செவ்வேள்
புரிசடைய னிடப்பாகந் தேவி கோவில் 24

[பொ-ரை] பிர்மஸ்தானத்தை-25, பாகஞ்செய்து நடுத்தானத்தில் கடவுளாலயங்கொள்க வடகிழக்கில் கணநாதன்கோவில் கொள்க, தென்மேற்கில் வியாயகர்கோவில் கொள்க, தென்கிழக்கு சூனியம், வடமேற்கில் நவக்கிரகம் அல்லது சுப்பிரமணியர்கோவில் கொள்க சிவபெருமானுக் கிடதுபாகம் உமையவளாலயங் கொள்க [எ-று]

குறிப்பு:- தென்கிழக்கில் நந்தனவனம் சிவலிங்கம் நிருமிப்பாருமுளர் மடைப்பள்ளிக்கொள்வது நன்றும்.

கோவிலான் வல்லப்பாகந் தொண்டர் கண்டாய்
குணமாக மேற்பாக மிலிங்கங் கொள்கப்
பூவிலா னெதிர்ப்பாகம் நந்தி கம்பம்
புகழோங்கும் பலிபீடம் வைப்பா யொப்பக்
காவிலான் வெளிப்பாக மதிலே கொள்வாய்
கண்டதிரு வாயிலொன் றல்லா ஞன்கே
வாவிதிருக் குளமீசன் வருணன் வீடா
மன்னுதே வாலயமீ தின்னஞ் சொல்வாம் [25]

[பொ-ரை] சிவபெருமானுக்கு வலதுபாகம் அடியார்களை நிருமித்தல்வேண்டும் பின்னுல் சிவலிங்கமாம், எதிரில் நந்திதேவர் துஜஸ்தம்பம் பலிபீடம் இவைகளைக்கொள்க,வெளிப்பக்கம் மதிலை நிருமிக்கவும்! கோவிலுக்குவாயில், 1 அல்லது 4 கொள்வதே உத்தமம் திருக்குளம், மேற்கு, வடகிழக்கு இவ்விரண்டிலொன்றிற்கொள்க (எ-று)

குறிப்பு:- வலப்பக்கத்தில், திரவியசாலையும், பண்டசாலையுமமைப்பது முளவாம்.

---

# ஆலயஸ்தாபன சக்கரம்



குறிப்பு - இக்கோவில்களுக்குவாயில்-1 அல்லது-4, கொள்க இஃது கிழக்கு நோக்சிய சந்நதியுள்ளகோவில், இப்படியன்றி வேற்றுதிசை நோக்கியசந்நதிக்கோவில்களுக்கும் 24, 25-வது செய்யுள்களிற் சொல்லிய வியலேப்போல் இசைத்துக்கொள்வதே சிற்பாச்சாரியார் களினியல்பெனச் சொல்வார் மேலோர்

வாமதே வாலயமெட் டெட்டு கூருய்
வகுத்தநடு நால்வீடு மீசன் கோவி
லேமமுற் பக்கமே நந்தி பீட
மிடத்திலே கணம்பின்னு னவக்கோண் மிக்க
தாமப்பான் வலப்பாகந் தொண்டர் கண்டாய்
ஈனிமூலே யிலேவாயு செவ்வே டியி
ஞமமுயர் பிள்ளையார் நிருதி துர்க்கை
நலமான வுளவீதி மதிலின் கூற்றே 26

(பொ-ரை) தேவாலயத்தை, 64 பாகஞ்செய்து, நடுத்தானம், 4-ம் பிர்மஸ்தானம் என்னும் கெற்பக்கிரகமாம் மூன்பக்கம்நந்திதேவர் பலிபீடமாம்! இடதுபக்கம்கணங்களைக் கொள்க பின்னுல் நவக்கிரகமாம்! வலப்பக்கம் அடியார்களைக் கொள்க ஈசானியமூலே சூனியமாம்! வடமேற்கு சுப்பிரமணியரும் தென்கிழக்குவிநாயகரும் தென்மேற்கு துர்க்காதேவியுங் கொள்க நடுவீதியில்மதிலே நிருமித்தல் வேண்டும் (எ-று)

குறிப்பு:- ஈசானியத்தில், நந்தனவனம், சிவலிங்கம் இவைகளே அமைப்பது முளவாம்

கூற்ருன வெளிவீதி முன்பா னந்திக்
குணமான பலிபீடங் கம்பம் பின்னு
னீற்ருன வடிவேலன் கோவில் காண்க
நிலேயான விடமலான் வலத்திற் பெண்ணுட்
கூற்ருன தென்வடலுங் கீல்மே லீசன்
குறிப்பான திசைமீதின் வாமத்துள்ளாள்
மாற்ருன முன்பாகந் தடாகங் தொண்டே
மந்திரமு மிவ்வாறு வகுப்பாய் மன்னே 27

[பொ-ரை] மதிலின் வெளிவீதிக்கு முன்பான சந்நதி யில் ரிஷபம், பலிபீடம், துஜஸ்தம்பம் கொள்க பின்னுல் சுப்பிரமணியர் கோவிலைக்கொள்க இடப்பக்கம் அல்லது வலதுபக்கத்தில் மகாலக்ஷீமி கோவிலைக்கொள்க தெற்கு வடக்கு,கிழக்கு,மேற்கு,வடகிழக்கு இத்திசைகளிலொன்றில் உமையவள் ஆலயங்கொள்க அவ்வுமையவளுக்கு எதிரில் தடாகங் கொள்க [எ-று]

குறிப்பு:- இடதுபக்கம் மகாலக்ஷீமி ஆலயம் வலது பக்கம் கணங்களாலயம் இவ்வாறு அமைப்பது நன்றென் பாருமுளர்

மன்னகே ணிருதியா லொற்றைக் கொம்பன்
மருவுசனி மூலைபால் கணத்தின் கூட்ட
மின்னல்புரி வடமேற்கி லடியார் கோவில்
விருப்போடு மடைப்பளிதா னெருப்பின் வைப்பாய்
சொன்னவிவ் வண்ணமே கோவில் காண்பாய்
சுகமிக்க பீடமுயர் கருட கருப
மன்னிமா ருதிகோவி லெதிரிற் கொள்வாய்
வளமான தொண்டருளேமாலுக் காமால் 28

[பொ-ரை] ஆலயத்தின் வெளிவீதி தென்மேற்கில் விநாயகரும், வடகிழக்கில்கணத்தின் கூட்டமும் வடமேற்கி லடியார்களும், தென்கிழக்கில் மடைப்பள்ளியும் நிருமித்துக் கொள்க இவ்வாறமைந்துள்ள, கோவிலின் பிர்மஸ்தானம் விஷ்ணுவாலயமாயின் சந்நதியில் பலிபீடம் கருடஸ்தம்பம் ஹனுமார் கோவிலும், எதிரிற் கொள்க விஷ்ணுகோவிலுக் குள் அடியார்களையும் நிருமித்துக்கொள்வதே நன்று [எ-று]

குறிப்பு:- தென்மேற்கில் விநாயகர் அல்லது காளி கோவிலை அமைத்தல் நன்றும் வடகிழக்கில் காளிகோவிலை நிருமிப்பதுமுளவாம்

விஷ்ணுவாலயமாயின், திருமாலுக்கு வலப்பக்கம் இலக்குமியும் இடப்பக்கம் ஆழ்வாரத்தியரும், வாயு, ஈசானி யம் இவ்விரண்டிலொன்றில் நம்மாழ்வார் கோவிலும், நிருதி திசை சூனியமாயும்,அக்கினியில் மடைப்பள்ளியுங்,அமைத் தல் வேண்டும்

சிவன் விஷ்ணு, இவ்விருகோவில்களுக்கும் பொதுவாக கெற்பக்கிரகமண்டபப் அர்த்தமண்டபம், மகாமண்டபம் ஆஸ்தானமண்டபம், உற்சவநாயகர்மண்டபம், அவரார சோபனமண்டபம், மாடம், மாளிகை, கூடம். கோபுரப் இவைகளோடு ஆலயம் அமையின் அஷ்ட இலச்குமிகளும் வாசஞ்செய்வார்கள் திருமாளப்பத்தியும் அமைத்தல் சுப லக்ஷணமாம்

யாகமண்டபம், வேதமண்டபம், நிர்த்தனமண்டபம் வாகனமண்டபம் இவைகளும் அமைப்பது நன்றபொருன் முளர்

## மண்டப விபரம்

கெற்பக்கிரக மண்டபத்தின் விஸ்தீரணத்தை எடுத்து 8 பங்கு செய்து, உமையவள் கெற்பக்கிரகம் 6 முதல் $7\frac{1}{2}$ பங்குவரையிலும், சுப்பிரமணியர் கெற்பக்கிரகம் 6 பங்கு வரையிலும் விநாயகர் கெற்பக்கிரகம் 1, 5, 6 பங்குவரையிலும், கொள்க இவ்வாறு முறையே திருமால், இலக்குமி, நம்மாழ்வார் தொண்டர்கள் கெற்பக்கிரகங்கஊ அமைத்துக் கொள்க இவையே பிரதான கெற்பக் கிரகங்களாம், மற்ற வதே நன்ரும் கெற்பக்கிரக விஸ்தீணத்தின்படி, அர்த்த மண்டபம் $\frac{1}{2}$ 1-ம், மகாமண்டபம் 1-க்கு $1\frac{1}{4}$ $1\frac{1}{2}$ 2-ம், மகா மண்டபம் விஸ்தீரணத்தின்படி, நிர்த்தமண்டபம் 1-க்கு $1\frac{3}{4}$ $1\frac{1}{2}$, $1\frac{3}{4}$, 2-ம், கெற்பக்கிரக விஸ்தீரணத்தின்படி, ஆஸ் தான மண்டபம் 1க்கு $1\frac{1}{4}$ $1\frac{1}{2}$ $1\frac{3}{4}$ 2 பங்கு வரையிலும் செய் வது உத்தமம்,

குறிப்பு:- சந்நதி எத்திசையோ அத்திசைக்கு ஒத்து தாய் 26, 27, 28-ம் செய்யுள்களைப்பார்த்து ஆலயங்களை அமைத்துக்கொள்வதே சிற்பாச்சாரியர்களியல்பாம் பிர மஸ்தானத்தின் இடம் அல்லது வலதுபக்கத்தி மகாலக்ஷ் மிபியக் கொள்க தெற்கு வடக்கு, கிழக்கு மேற்கு வட கிழக்கு இத்திசைகளிலொன்றில் உமையவள் ஆலயங் கொள்க (எ-று)

## விக்கிர ஸ்தாபனம்

குறிப்பு:- பொதுவாக, நின்றவிக்கிரங்களை ஸ்தூ ந மையத்திலும், உட்கார்ந்த விக்கிரங்களை பின்னுல் 6 அங் குலந்தள்ளியும் சயனவிக்கிரங்களை பின்னுல் 12 அங்குலம் தள்ளியும் ஸ்தாபிக்க வேண்டும் ஆனுல் காளி பிடாரி வீரன் முதலிய பலிகொள்ளும் தெய்வங்களை எப்போதும் பின்னுல், 18 அங்குலம் தள்ளியும் ஸ்தாபிக்க வேண்டும் எவ்வகை விக்கிரகங்களும் சிலாருபமுள்ளவைக்கே அஷ்டபந்தனஞ் செய்து ஸ்தாபிக்கவேண்டும் அஷ்டபந்தனஞ் செய்து மூர்த்திகரம் அல்லவென்றும் அதைக்கைதொழுதால் நற்பய னடையமாட்டார்களென்றும் சொல்லப்படும்

## அஷ்டபந்தன விபரம்

காவி பலம் 1, கொம்பாக்கு பலம் 2, ஜாதிலிங்கம் பலம் 5, சுக்கான்கல் பலம் 4, கருங்குங்கிலியம் பலம் 4, செம்பஞ்சு பலம் 1, மெழுகு பலம் 2 வெண்ணெய்பலம் 1, இவ்வெட்டு மருந்துகளில், செம்பஞ்சு மெழுகு வெண்ணெய் இவை நீங்கு தலாக மற்றமருந்துகளை கல்லுரலில் இடித்து வடியக் கட்டியதோடு மற்ற மூன்றுஞ் சேர்ந்து செவ்வையாய் உரலில் இடித்து மெழுகு பதத்தில் எடுத்துக் கொள்வதே அஷ்டபந்தன மருந்தாம்.

## கெற்பகிரக விமானம்

### ஏகதள விபரம்

குறிப்பு:- கால்பிரவாப் விஸ்தீரணத்தை இரட்டித்து, 8 பஞ்ராகசெய்து, அதிஷ்டானம்1, கால்உபிரஸ்தளம்2, கழுத்து-1

# உ-வது

# ஆலயஸ்தாபன சக்கரம்

மேற்கு

தென்மேற்கு — வடமேற்கு

வெளிமதில் — வெளிமதில்

| [illegible] | | | | | சுப்பிரமணியர் | | [illegible] |
|---|---|---|---|---|---|---|---|
| | உ | உள்மதில் | | உ | ள்மதில் | | |
| மஹாலக்ஷ்மி | ள்மதில் | துர்க்கை | நவ | கிரகம் | சுப்பிரமணியர் | ள்மதில் | |
| | | அடியார்கள் | சி | வா | சக்ஷ | உமை | யவர் |
| | உ | | ல | யம் | ர. | உ | |
| | ள்மதில் | விநாயகர் | நந்திப | லிபீடம் | சூன்யம் | ள்மதில் | |
| | உ | ள்மதில் | உ கிழவா | க்குயில் | ள்மதில் | த | டாகம் |
| [illegible] | | | நந்திபதுஜஸ் | லிபீடம்தம்பம் | | | கணம் |

வெளிமதில் — வெளிமதில்

தெற்கு — வடக்கு

தென்கிழக்கு — ஈசான்ய

கருடஸ்சம்பம்பலிபீடம் அநுமார்

கிழக்கு

சிகரம்-2 ஸ்தூபி 1, ஆக கூறு 8 அதிஷ்டானத்தை 23, பாகஞ் செய்து பிரதமையில் பலகை 2 உபானம், 3 ஜெகதி 6 குமுதம் 5 கம்பு 1 கண்டம் 2, கம்பு 1, பட்டிகை 2 கம்பு 1. ஆக கூறு 23 கால் உயரத்தை 7 பாகஞ்செய்து வேதிபல் 1, கால் 4, பூஷணம் 2, ஆக கூறு 7 ஷ பூஷணத்தின் உயரத்தை 5, பாகஞ்செய்து தாடி 1. கண்டம் ½ குடம் 3, கண்டம் ½ பலகை 4 வீரகண்டம் 2 போதியல் 4. ஆககூறு 15. பிரஸ்தனம் உயரத்தை 23 பாகஞ்செய்து உத்திரம் 4, கம்பு, எழுதகம் 4, சுபோதம் 9 யாளம் 5 ஆககூறு 23 கழுத்து உயரத்தை 3 பாகஞ் செய்து வேதியல் 1, கால் 2, ஆககூறு 3, சிகரத்தை 44 பாகஞ்செய்து உத்திரம் 2, கம்பு 1, உழுதகம் 2: சிரவி 3, ஊர்த்தபத்பமம் 2 கையுருவி 1 அதோபத்மம் 2. பண்டிகை 22, மாலைக்கட்டு 1, சந்திரநிலை 2, பல்யசர்மம் 6 ஆககூறு 44 ஸ்தூபியை 25 பாகஞ்செய்து மகாபத்மம் 5, கண்டம் 1, அரடா 3, கண்டம் 1, குடம் 7, கண்டம் ½ அரடா 2 கண்டம் ½, அலர் 1, கண்டம் ½ கதலிப்பூ 3½ ஆககூறு 25.

ஏகதளவிபரம்

முற்றிற்று

## துவிதள விபரம்

குறிப்பு-கால் பிரவாய் விஸ்தீரணத்தை இரட்டித்து 28 பாகஞ்செய்து அதிஷ்டானம் 3 கால் உயரம் 6 பிரஸ் தளம் 3, கர்ண கூடு உயரம் 5 பிரஸ்தளம் 2. கழுத்து 2 தூக்கோடு 1, பண்டியல் 3, ஸ்தூபி 3 ஆககூறு 28 அதிஷ்டானத்தை 26 பாகஞ்செய்து உபானம் 6 ஜெகதி 6, குமுதம் 6, கண்டம் 2. பட்டியல் 6, ஆககூறு 26 கால் உயரத்தை 7 பாகஞ்செய்து வேயல் 1 கால் பூஷணம் 1, ஆக கூறு 7, ஷ பூஷணத்தை 5 பாகஞ்செய்து தாடி 1, கண்டம் ½, குடம் 3, கண்டம் ½ பலகை 4, வீரகண்டம் 2, போதியல் 4 ஆக கூறு 15 பிரஸ்தள உயரத்தை 26 பாகஞ்செய்து உத்திரம் 5 எழுதகம் 6 கேபோதம் 10 யாளம் 5, ஆறு கூறு 26. கர்ணக்கூடு உயரத்தை 8 பாகஞ்செய்து வேதியல் 1 கால் 2, மஞ்சம் 1, கழுத்து 1, பண்டியல் 2, ஸ்தூபி 1, ஆக கூறு 8, பிரஸ்தள உயரத்தை 24 பாகஞ்செய்து உத்திரம் 4

எழுதகம்5, கபோதகம் 10, யாளம் 4,ஆககூறு 23கழுத்து உயரத்தை 4 பாகஞ்செய்து வேதியல் 1, கால் 3, ஆக 4, தூக்கோடு உயரத்தை16 பாகஞ்செய்து உத்திரம் 3, எழுதகம் 4, சிறவி 3, அதோபத்மம் 3, மாலைக்கட்டு 1, ஊர்த்த பத்மம் 2, ஆக கூறு 16 பண்டியல் உயரத்தை 29 பாகஞ்செய்து குடம், மாலைக்கட்டு 1. சந்திரநிலை 2, பல்பயபத்மம் 5 ஆக கூறு 23 ஸ்தூபி உயரத்தை 27 பாகஞ்செய்து மகா பத்மம் 5 கண்டம் 1, அரடா 3, கண்டம் 1, குடம் 7, கண்டம் 1, அரடா $2\frac{1}{2}$, கண்டம் 1, அலர் 1, கண்டம் $\frac{1}{2}$, வாழைப்பூ 4, ஆக கூறு 27

துவிதளம் முற்றிற்று

## திரிதள விபரம்

குறிப்பு - கால்வாய் விஸ்தீரணத்தை இரட்டித்து 48 பாகஞ்செய்து அதிஷ்டானம் 4, கால் 8 பிரஸ்தளம் 4 கால் 3. அடுக்கு 3, உள் நாட்டியமஞ்சம் 3, கால் $2\frac{1}{2}$ அடுக்கு $2\frac{1}{2}$ உள் நாட்டிய மஞ்சம் 2. கழுத்து தூக்கோடு 2 பண்டிகை 4 பல்யபத்மம் ஸ்தூபி $3\frac{3}{4}$ ஆககூறு 48 அதிஷ்டானத்தை 26 பாகஞ்செய்து பத்மம் 5 ஜெகதி 6, குமுதம் 7 கண்டம் 2 பட்டியல் 6, ஆக கூறு 26 கால் உயரத்தை 7 பாகஞ்செய்து வேதியல் 1 கால் 3 அடுக்கு 3, ஆக கூறு 7 ஷை அடுக்கை 19 பாகஞ்செய்து அசுபாதம் [ஈரகம்] 1, கலசம் 3 தாடி 1. அல்லிக்கால் 1 (கண்டம்) $\frac{1}{2}$ குடம் 3, அல்லிக்கால் $\frac{1}{2}$ பலகை 4, வீரகண்டம் 2, போதிகை 4, ஆககூறு 19. பிரஸ்தளத்தை 2 பாகஞ்செய்து உத்திரம்4,கம்பு 1 எழுதகம் 4 கபோதம், யாளம், 5 ஆக கூறு 21 கால் உயரத்தை 4 பாகஞ்செய்து வேதியல் 1, கால்3 ஆக கூறு 4 அடுக்கை 23 பாகஞ்செய்து உத்திரம் 1, எழுதகம் 1, கபோதகம் 4, யாளம் 1, வேதியல் 1, கழுத்து, 2 உத்திரம் $\frac{3}{4}$ எழுதகம் $\frac{3}{4}$ தூக்கோடு 2, கையுருவி 1, பண்டிகை 6 கையுருவி1, பல்ய பத்மம் $1\frac{1}{2}$. ஆக கூறு 23, உள் நாட்டிய மஞ்சத்தை 19 பாகஞ்செய்து உத்திரம்4, எழுதகம் 5,கபோதல 7,யாளம் 3, ஆக கூறு 19 கால் உயரத்தை 4 பாகஞ்செய்துவேதியல் 1. கால் 3, ஆககூறு 4.அடுக்கை21 பாகஞ்செய்துஉத்திரம்1

எழுதகம் 1, கபோதகம் 8, யாளம், 1, வேதியல் 1 கழுத்து 2, உத்திரம் $\frac{1}{4}$ எழுதகம் $\frac{1}{4}$ தூக்கோடு 2. கையுருவி $\frac{3}{4}$ பண்டிகை 6. கையுருவி $\frac{1}{4}$ பல்யமத்மம் 1, ஆக கூறு 21 உள்நாட்டியமஞ்சத்தை 16 பாகஞ் செய்து உத்தரம் 8 எழுதகம் 4. கபோதம் 16 யாளம் 3 ஆக கூறு 6 கழுத்தை 4 பாகஞ்செய்து வேதியில் 1. கால் 3 ஆககூறு 4 தூக்கோட்டை 11 பாகஞ் செய்து உத்திரம் 2 எழுதகம் 3 தூக்கோடு $2\frac{1}{2}$ ஊர்த்தபத்மம் $1\frac{1}{2}$. கையுருவி $\frac{1}{2}$ அதோபத்மம் $1\frac{1}{2}$ ஆக கூறு $1\frac{1}{2}$ பண்டிகை உயரமே பண்டிகையாம் பல்யபத்மத்தை? பாகஞ்செய்து கையுருவி 1 கண்ணுடிசட்டம் (5ந்திரனிலை) 2. பத்மம் $\frac{1}{4}$ ஆக கூறு. 7 ஸ்தூபி துவிதன ஸ்தூபியைப்போல் கணக்கிட்டுக் கொள்ளவும்.

இம்மூன்றும் சாந்தீகமென்னும் தளங்களாம்

திரிதளம்-முற்றிற்று.

## ஏகதளத்தின் கர்ணக்களத்தி

குறிப்பு:- அதிஷ்டானத்தை 6 பாகஞ்செய்து கர்ணக்களத்தி 2 கால்பரப்பு 1. செய்யவும் கர்ணக்களத்தி 2ல் பத்மம் 1, குமுதகபட்டம் $\frac{1}{2}$ பட்டியல் ஒழுங்கிலே வேதியல் கால் பரப்பை 21 பாகஞ்செய்து தாடிக்களத்தி 3 தாடியிலிருந்து குடம் 6. குடத்திலிருந்து பலகை 12 ஆக கூறு 21 போதியல் கால்பரப்பு 1 எழுதகத்தலையீடு கால்பரப்பு 1 பந்மஜெகதி பூமுனை ஒழுங்கில் கபோதம் எழுதக ஒழுங்கில் யாளம். கால் உள்வாய் ஒழுங்கில் கழுத்து வேதியல் கால் கால்உள்வாயை எடுத்து 4 பாகஞ்செய்து கழுத்து விஸ்தீரணம் 3. கபோத ஒழுங்குவரையில் கண்டத்தை எடுத்து 2 பாகஞ்செய்து எழுதகக்களத்தி 1. வேதியல். கம்பொழுங்கில் தூக்கோடு. தூக்கோடு உயரத்தை 13 பாகஞ்செய்து மேல்சரிவு 11. எழுதகமின்னொழுங்கில் ஏத்தபத்மம்: ஏத்தபத்ம அகலத்தை 13 பாகஞ் செய்து மாலைக்கட்டு 11 ஏத்தபத்மம் மார்பொழுங்கில் கவுத்த பத்மம் கழுத்து எழுதக

மின்னெழுங்கில் மையப்பண்டிகை, மையப்பண்டிகை அகலத்தை 5 பாகஞ்செய்து மாலைக்கட்டு 3 மாலைக்கட்டு அகலத்தை 5 பாகஞ் செய்து பல்யத்மம் 3, பல்யபத்ம அகலத்தை 5 பாகம் செய்து அகலத்தை 3, மகாமத்மம்மார் பொழுங் குடம் குடத்து அகலத்தை 5 பாகஞ்செய்து கீழ் அரடா 3, மேல் அரடா 2 ஆக கூறு 5 அரடா மின்னெழுங் கில் அலர். அவரை 5 பாகஞ்செய்து பூப்பரப்பு 3 அதிலி ருந்து வாழைப்பூக்கரைவு செய்யவும்

கர்ணக்களத்தி

முற்றிற்று

## படைக்னக விபரம்

குறிப்பு:- கால்பிரவாயை 5 பாகஞ்செய்து படைக்கனம் 1, உள்விஸ்தீரணம் 3, படைக்கனம் 1, ஆக கூறு 5.

## கோமுகை விபரம்

குறிப்பு:- பிராணருக்கு பத்மம் க்ஷத்திரியருக்கு ஜெகதி வைசியருக்கு குமுதம் சூத்திரருக்கு பட்டியல் இவ்வாறு கோமுகை வைக்கவும் கோமுகை தாழ்ந்தும் வாசல் உயர்ந் தும் இருக்கவேண்டும்

## ஐந்து நிலக்கோபுரத்தின் விபரம்

மொத்தக்கூறு

குறிப்பு:- ஆயாதிவிஸ்தீரணத்தால் உன்னதங்கொண்டு ஷ உன்னதத்தை 23 பாகஞ்செய்து உத்திரமுதல் ஸ்தூபி வரையில் செய்யும் விபரம்

பிரஸ்தளம் 1¼, கால் அடுக்கு 3½ மஞ்சம் 1½ கர்ணக் கூடு 3. மஞ்சம் 1¼ கால் அடுக்கு 2½ மஞ்சம் 1 அடுக்கு 2 மஞ்சம் 1. கண்டம் 1¾ சிகரம் 2,7-8ஸ்தூபி 1¼ ஆககூறு 23

## ஏழ்நிலக்கோபுரத்தின் விபரம்

### மொத்தக்கூறு

குறிப்பு:-ஆயாதி விஸ்திரணத்தால் உன்னதங்கொண்டு
ஷ உன்னதத்தை 36 பாகஞ்செய்து உத்திரமுதல் ஸ்தூபி
வரையில் செய்யும் விபரம்

பிரஸ்தளம் $2\frac{1}{4}$ கால் $4\frac{1}{2}$, மஞ்சம் 2, கால் 4. மஞ்ச
$1\frac{3}{4}$ கால். $3\frac{1}{3}$ மஞ்சம் $1\frac{1}{2}$ கால் 3 மஞ்சம் $1\frac{1}{4}$ கால் $2\frac{1}{2}$ மஞ்
சம் 1. கால் 2. கபோதம் 1.4/8 கண்டம் 18 சிகரம்
ஸ்தூபி 13/8· ஆக கூறு 36 முன்சொன்ன தளங்களி
விபரமும் அடக்கஞ்சுக்கத்தின் கணக்கும் இதிற் சொன்
கோபுரங்களுக்கும் யூகித்துப்பார்த்துச் செய்வதே சிற்பா
சாரிகளினியல்பாம்

ஆயாதி விஸ்தீரணத்தைக் கூட்டியும் குறைத்து
உன்னதங் கொள்வாருமுளர்

## முகூர்த்தாரம்பத்தில்குழிகெல்லும் திசையும் சகுனமும்

ஆமருவு நகரோடு தடாக மில்லா
மாலயந்துறவாதி முகூர்த்தஞ் செய்ய
மாமருவு குழிதோண்டி லீசனல்லான்
வடகோடு கீட்டிசையும் நன்ரு மென்ப
பூமருவு காலத்தி லொற்றைக் கொம்பன்ர்
புகழாள தேவற்குத் தூபந் தந்து
தேமருவு முப்புடைக்கா யுடைப்பா யானுற்
சிறப்பாக விருபாதி யாத னன்ரும் 29

[பொ-ரை] நகரம் தடாகம், வீடு ஆலயம் கூபம் இவை
ளுக்கு முகூர்த்தாரம்பத்தில் வடகிழக்கில் குழிகெல்லுத

உத்தமம் அல்லது வடக்கும் கிழக்கும் உத்தமம் அக்குழி கெல்லுவதற்கு முன் விநாயகருக்கு தூபங் கொடுத்துக் தேங் காயுடைக்க அஃது இருபாதியாயுடையில் நன்று (எ-று)

குறிப்பு வடகிழக்கு உத்தமம் கிழக்கு வடக்கு மத்திபம் சித்திரை மாதத்தில் கிழக்கிலுப் தை மாதத்தில் வடக்க லும் முகூர்த்தாரம்பம் செய்து குழிகெல்லின் தீதாம்

நன்ருன பாதியலாற் குறுக்கே போக
னயமிலாச் சின்னமிவை காண றும்மற்
பொன்றுதுன் னிமித்தமிவை யாகா கந்தோ
புனர்ப்பான மனைமக்க ளிறப்பர் கண்டாய்
துன்றுகா யிருபாதி யானுன் மிக்க
தூபமே தீபமுடன் றந்து வானிற்
குன்ருத செங்கருடன் வட்ட மிட்டாய்
கோடிதன வானுவான் குருயைக்கெல்லே

(பொ-ரை) தேங்காய் இருபாதியா யுடைய தலின்றி குறுக்கே பிளத்தல், பலசின்னங்களாதல் மனிதர் தும்மல் இவை முதலிய துன்னிமித்தகாணின் மனைவி மக்கள் இறப் பார்கள் தேங்காய் இருபாதியாயுடைந்தால் உடனே விநாய கருக்கு தூபந்தந்து ஆகாயத்தைப் பார்க்சில் கருடன் வட்டமிட்டால், கோடி என்னும் இலக்கமுள்ள தனவானு வான் என்றெண்ணி குழியைக் கெல்லுவாய் (எ-று)

குறிப்பு:- தேங்காயுடைத்தால் முடிபெருத்து அடிசிறு, கில் இலக்ஷுமிகடாக்ஷமுண்டு மூன்று பங்கு சிரசிலும் ஒரு பங்கு பாதத்திலுமானுல் சந்தோஷமுண்டு தலைபெருத்து அடிசிறுத்திருப்பதே நன்ரும், கடுகுப்பிரமாணம் சிதளாக விழுந்தால் இரத்தினஞ் சேரும் பலவாறு சிதறியுடைந்தால் வெகு துன்பம், தேங்காயுடையாது கைதவறி வீழ்ந்தால் அன்னங்கிடைக்கமாட்டாது, வீடு முதலானவைசளை விற் றுண்பன், அதிக துக்கப்படுவன் ஓடு நெறிந்தால் சரீரத்திற் பிணியுண்டாம்.

## குழிச்சல்லியம்

கெல்லுவாய் மண்வெட்டி யதனு லந்தக்
கீழான பூமிக்குள் விறகு பாம்பு
செல்லோடு தேன்கூடு பூரா னுமை
தேளெலும் புமிகருங் கல்தோ டான
மல்லலுடும் பெறும்புகரி மயிரு மாகா
வகையான விவைபொல்லா வதமங் கண்டாய்
நல்லகுட வளையீய மிரும்பு கண்டா
னலமோங்கு மத்திபத்திற் சுகங்கண்டாயே 31

[பொ-ரை] மண்வெட்டியால் பூமியைக்கெல்லப்பட்ட அக்குழியில்: விறகு பாம்பு, கரையான், தேன்கூடு, பூரான் ஆமை, தேள், எலும்பு, உமி, கருங்கல் ஓடு, உடும்பு,எறும்பு கரி,மயிர், இவைகளைக்காணின் பொல்லாத கேட்டைத்தரும் பித்தளை, ஈயம் இரும்பு இவைகளைக்காணின் மத்திபத்தில் நன்று (எ-று)

குறிப்பு:- நகம், முட்டை, வண்டு இவைகளும் ஆகாவாம். பசுவின்கொம்பு, செங்கல் பஞ்சலோகம் இவைகளைக் காணின் சுகமுண்டாம்

பாண்டியநாடு, சேரநாட்டில் கருங்கல்லை சல்லியமல்லவென்றும், அஃது குற்றமாகாவென்றும் சொல்வாருமுளர்,

கண்டவளை சிலந்திமண் டூகம் பல்லி
காணிலோ நன்றுஞெண் டாக்கஞ் சொன்ன
பண்டுதன முண்டாகி னன்று நீங்காப்
பணமுளாள் கடவுளுயர் வடிவங் கண்டால்
மண்டலத்தி னன்மையிலை பூத மேவு
மனையென்பர் விதைகாண மிக்க செல்வங்
கொண்டுளா னன்மனைவி மக்களுண்டாங்
குழிநீரி னலனோங்கும் பலனே சொல்வாம் 32

(பொ-ரை) ஷ குழியித், சங்கு, சிலந்தி, தவளை, பல்லி இவைகளைக்காணின் நன்மையாம் நண்டடக்காணின், செல்வமுண்டாம் தனத்தைக்காணின் சுகமும் செல்வமுண்டாம் விக்கிரகங்களைக்காணின் பூரமுதலிய பேய்கள் குடி கொள்ளும் தானியங்களைக்காணின் மிகுந்த செல்வமும் மனைவி, மக்களோடு வாழ்வார்கள் ஷ குழியில் நீர்விடும் பலனை இனிச்சொல்வாம் (எ-று)

குறிப்பு:- பழைய மண்குடம், அரணை இவைகாணின் செல்வமுண்டென்பாருமுனர்.

குழியில் நீர் விடும் பலன்

வாமத்தின் முழங்கண்ட குழியே கெல்லி
மண்ணினீர் பூவோடு விடுப்பீ ராயி
னுமத்தின் ஜலமோடி வலமே வந்தா
னலமான செல்வமே யதிக முண்டாம்
வாமத்திற் கேடதிக மனையாண் மக்கண்
மடிவராங் கடிகையோர் முப்ப தாயி
னுமத்தின் ஜலம்வற்றிப் பிளப்பு காணி
னல்துரவா மனைவேந்த னிலையுஞ் சொல்வாம்

(பொ-ரை) ஒருமுழம் சதுரம் ஒருமுழம் ஆழமாகக் குழி கெல்லி நீரும் பூவும்விட: அந்நீர்வலஞ்சுற்றி வந்தால் மிகுந்த செல்வமுண்டாம், இடஞ்சுற்றிவந்தால் மனைவி மக்களிறப்பர் அதிககேடுண்டாம் அக்குழியில்யிட்டஜலம் 30 நாழிகைக்கு மேல் சுவறி யிளப்போடி இருந்தால் தரித்திரமாம், இனி வாஸ்து புருடன் நிலையை சொல்வாம் (எ-று)

குறிப்பு:- வலம் இடம்சுற்றுது நிலையாக நிற்கில்தாமதத்தில் கட்டிடம் கட்டமுடியும். மத்திப பலனும் குழியில் விட்ட ஜலம் சுவருதிருக்கில் செல்வமுண்டாம். நீரெலாம் வற்றி பூமிபிளப்போடி இருந்தாலும் பிளப்போடா திருந்தாலும் துன்பத்தையே விளைவிக்கும் கெல்லின குழியின் மண்ணை ஷ குழியில் கொட்டினுல் மண்

மிகுதியாயிருந்தால் லாபமுண்டாம், குறைந்தால் சிலவதிகமாம். சமமாயிருந்தால் வரவும் செலவும் சமமெனச்சொல்லும் நூல்களுமுள்ளன.

வாஸ்துபுருடன் பரியாயப்பெயரும்

நித்திரைகொள்ளுமிடமும்

சொல்லரிய பூபால னிராசி மன்னன்
சுகமிக்க மணிவேந்தன் கிரக நாதன்
சல்லியப்புருடனென வாஸ்து நாமஞ்
சாற்றுவார் மேடமுதல் மீன மீரு
யெல்லிரவி நின்றவிட மடிகணீட்டி
யேழாகு மிராசிபான் முடியே வைத்து
கல்லவிடக்கரம் பூமி வலக்கை மேலாய்
நண்ணுவான் மிக்கதுயில் பண்ணு வானே 34

(பொ-ரை) வாஸ்துபுருடன் பெயர்-பூபாலன், இராசி மன்னன், மணிவேந்தன் சிரகநாதள் சல்லியப்புருடன் என 5ஆம் மேஷராசி முதல் மீனராசி ஈருக சூரியனின்ற ராசியில் பாதங்களை நீட்டி அதற்கு 7-ம் இராசியில் சிரசு வைத்து இடதுகை கீழாகவும் வலதுகை மேலாவெம் படுத்து நித்திரை செய்வான் (எ-று)

குறிப்பு:-வாஸ்துபுருடன், பங்குனி, சித்திரை, வைகாசி இந்தமாதங்களில் வடக்கே பார்வையாகவும், ஆனி, ஆடி, ஆவணி, இந்த மாதங்களில் கிழக்கே பார்வையாகவும், புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை இந்த மாதங்களிற் தெற்கே பார்வையாகவும் மார்கழி, தை, மாசி இந்த மாதங்களில் மேற்கே பார்வையாகவும் இருப்பான் (எ-று)

வாஸ்துபுருடன் நித்திரைவிடுதல்

———

வான்மேட மீரைந்தி ஊற்தே ருள
மதிபிருபத் தொன்றிலெட்டாடி பன்ஞென்

ருன்மேவு மிரண்டதாஞ் சிங்க மாறி
 றங்குமூ வேழுகோற் பன்னொன் ருன
தேன்கேவு மிரண்டுதே ளெட்டிற் பத்து
 செய்யசுரு பனிரண்டி லெட்டு கும்பந்
தான்மேவு மைந்நான்கி லெட்டு கண்டாய்
 தனக்குமேல் விழிப்பானேர் முகூர்த்தந் தானே

(பொ-ரை] சித்திரை மாதம் 10-ந் தேதி 5 நாழிகை வைகாசி மாதம் 21ந்தேதி 8 நாழிகை ஆடிமாதம் 11ந்தேதி 2 நாழிகை ஆவணிமாதம் 6ந் தேதி 21 நாழிகை ஐப்பசி மாதம் 11ந் தேதி 2 நாழிகை கார்த்திகை மாதம் 8ந் தேதி 10 நாழிகை தைமாதம் 12ந் தேதி 8 நாழிகை மாசி மாதம் 20ந் தேதி8 நாழிகை இந்நாழிகைகளுக்கு மேல் 3¾நாழிகை வரையில் வாஸ்துபுருடன் நித்திரைவிட்டிருப்பான் [எ-று] ஆனி, புரட்டாசி, மார்கழி, பங்குனி இம்மாதங்களில் நித்திரை விடுவதில்லை என்றறிக

குறிப்பு:- வாஸ்துபுருடன் நித்திரைவிடும் இவ்வெட்டு மாதங்களிலும் கிரகாரம்ப மூதலானவைகளைச் செய்யலாமெனச் சொல்லும் நூல்கள் பல உள்ளன: அதில் அருகர் புத்தர் முதலிய மதத்தினருக்கு ஆடிமாதமும் அரயியர், துருக்கர்களுக்கு ஆடிமீ மாசிமாதமும் நகரமுதலைத்திடங்களும் கொன்னின் ஏற்பலனைத்தரும் எ-று

வாஸ்துபுருடன் பஞ்சகிருத்தியங்கன்

தானேயம் முகூர்த்தத்தி லைந்து கூறு
 தானமே பூசையோ டசன மப்பான்
மானேகே ளினியதாம் பூலங் கொண்டு
 மன்னனு யரசாள்ய னிவ்வா ருன
கோனேயவ் வரசாள னன்று கண்டாய்
 டுறிப்பாள முதனுன்டு ரவெறுப்பார் நல்லோர்
தேனேயக் கூறைந்து மூன்றே முக்காற்
 செல்லவே மயலாகி துயிலே கொள்வான்

[பொ-ரை] வாஸ்துபுருடன் முனர்த்தம் 3¾ நாழிகை 5 பாகம் செய்து முதல் நாழிகையில் ஸ்நானஞ் செய்வான் 2-வது ¾ நாழிகையில் பூசை செய்வன், 3-வது ¾ நாழிகையில் போசனம் 4-வது ¾ நாழிகையில் தாம்பூலங்கொள்வன் 5-வது ¾ நாழிகையில் அரசாள்வன் இப்பஞ்சகிருத்தியங்களில் அரசாளுதல் நன்ரும் மற்றைநான்கும் தீதாம். இம்முகூர்த்த காலஞ்சென்றவுடனே மறுபடியும் படுத்து நித்திரை செய்வான் [எ-று]

குறிப்பு:- தாம்பூலங்கொள்ளுதலும் நன்றெனச்சொல்லும் நூல்களுமுள்ளன.

## வாஸ்துபுருடன் நிலையில் வாசலும் முகூர்த்தமும் கொள்ளுதல்

வான்கொண்ட மனைவேந்த னுதர கெற்ப
மனையாதி முகூர்த்தமே வாசல் கொண்டா
றேன்கொண்ட மனைமக்களாதி யோடு
செல்வமே கொள்வருய நிராசி மன்ன
னூன்கொண்ட சென்னியள வான கூற்றி
னுறையுளா மனையோடு மக்கணில்லார்
தான்கொண்ட பூபாலன் விண்டு சாய
றனுவாதி குணமெலாம் பணிப்பக் கேண்மின் 37

(பொ-ரை) வாஸ்துபுருடன் கெற்பஸ்தானமாகிய வயிற்றில் முகூத்தமுதலானவைகளைச் செய்யவும் வாசற்கால் வைக்கவும், நன்ரும், அவ்வாறு செய்யின், மனைவி மக்களோடு செல்வமும் மிகுந்தவராய் வாழ்வார்கள், வாஸ்துபுருடன் வயற்றினின்றி மற்றை அங்கத்திற் செய்யின் மனைவி மக்கள் இறப்பார்கள். செல்வம்போம்: விஷ்ணுவாம்சரான ஷை வாஸ்துபுருடன் தேகலட்சணங்களை இனிச்சொல்வாம். [எ...று]

குறிப்பு:- வாஸ்துபுருடன் காலில் முகூர்த்தம் செய்தால் மனையாள் மரணம். தலையில் முகூர்த்தம் செய்தால் எஜமானன் மரணம், முதுகில் முகூர்த்தம் செய்தால் இராஜபயமுண்டாம்.

கால், தலை, முதுகு இம்மூன்றிடங்களிலும் வாசல்விட்டா லும் இக்கொடியபலனே தரும் (எ-று)

### வாஸ்துபுருடன் லக்ஷணம்

மின்னேக்கு மனைவேந்த னுடலே கெற்பம்
விளங்குசீ ராதாயஞ் செலவே சொல்லி
னன்னேக்கும் வினையாதி யோனி கேண்மி
னலமான கீட்டிசையோ டாதி யென்மர்
சொன்னேக்குந் திருமாலவ் வுருவாய் நின்று
சுகமான கருடன்முத லிருநா லான
வென்னேக்கும் வாகனமீ தூரு மென்ப
ரிடமான புவிநாதன் வடிவஞ் சொல்வாம் 38

(பொ-ரை) வாஸ்து-புருடன் தேகமே கெற்பமாம் நல் வினை தீவினை 2-ம் ஆதாயம் செலவாம். அப்பூபாலனே, இந்திரன், அக்கினி, எமன். நிருதி, வருணன் வாயு குபேரன் ஈசானியன் இவ்வெட்டுருவாய் நின்று கருடன், பூனை, சிங்கம், சிவானம் சர்ப்பம், எலி யானை, முயல் இவ்வெட்டு யோனிகளான வாகனங்களிலேறி நடத்துவான்,

குறிப்பு:- விஷ்ணுவாம்சமுன்ள வாஸ்துபுருடன் நகரம் கோவில் வீடு, தடாகம் கூபம் என்னும் ஐந்திடங்களினின் றும் முத்தொழில்களைச் செய்துவருகிருன் [எ-று]

சொல்லரிய சனிவார மிறுதியாகச்
சொன்னதே நன்மேதை ட்ங்கம் புண்ணீர்
வில்லாருந் தசைமூளை யிரதம் விந்து
மேவுநீ டாதென்பர் கிரக நாத
னெல்லூரும் வலதுகரம் பூர்வ பாகத்
தினமருவு திதிவாம புயம்பின் னுளின்
மல்லூரும் திதிகண்டா யகலம் பூண்ட
மணியெலாஞ் சோதிட ருடுவா மென்னே

(பொ-ரை) வாஸ்துபுருடன் தோல், எலும்பு இரத்த தசை, மூளை, இரத்தம், சுக்கிலம் இந்த சப்த தாதுக்களு ஞாயிறு, திங்கள். செவ்வாய், புதன் வியாழன் வெள்ளி ச இவ்வாரங்கள் ஏழுமாம் வவது நகரம் பூர்வபட்சத் திதி 15ஆம் இடதுகரம் அமரபட்சத்திதிகள் 15ஆம் மா லணிந்திராநின்ற இரத்தினுபரணமே நட்சத்திரங்கள் 2 (எ-று)

குறிப்பு:- வாஸ்துபுருடன் கைகளின் கட்டைவி பிரதைமை சுட்டுவிரல், துதிகை, நடுவிரல், திரிதி பவுத்திர விரல் சதுர்த்தி சுண்டுவிரல், பஞ்சமி உள்ளங் ை பஞ்சரேகைகள் சஷ்டி சப்தமி, அஷ்டமி, நவமி. தச இவ்வைந் துகளுமாம் புறங்கை, ஏகாதசி, கணுக்கை, து தசி, முழங்கை, திரயோதசி, அக்குள், சதுர்த்தசி வ கை மூலம் பௌர்ணமி, இடதுகை மூலம், அமாவாசை, ஆ திதுஸ் தானம் 15-ஆம்

அசுபதி, மகம், மூலம் வைடூரியம் பரணி, பூரம் பூ டம் வற்சிரம், கார்த்திகை, உத்திரம் மாணிக்கம் ரோக அஸ்தம், திரிகோணம் முத்து மிருகசிரம். சித்திரை, அவி டம் பவளம் திருவாதிரை, சுவாதி, சதையம் கோமேதக புநர்பூசம், விசாகம் பூரட்டாதி புஷ்பராகம், பூசம் அநுஷ உத்திரட்டாதி நீலம்,,ஆயிலிாம், கேட்டை, ரேவதி பச் இவை நட்சத்திர இரத்தினங்களாம்.

என்னவே மேடமுதல் மீன் மீரு
மீராறுஞ் சென்னியா னனமே யண்ண
மின்னுதே ளகலமிரு ஞாங்கர் பின்னுன்
விளங்குவெரி நிலிங்கநீன் குறங்குசானு
பன்னுகணைக் காலோடு தாளீ ராரும்
பண்பான வங்கத்தி னேரை கண்டாய்
துன்னுமனை வேந்தனுய ரம்சத் தானே
சுகமான நவ்வாயி லென்பார் நல்லோர்

(பொ-ரை) வாஸ்துபுருடன் சிரசுமுகம் அண்ணம் பு மார்பு பக்கம் மூதுகு இலிங்கம் துடைமுழந்தாள் கணைக்க பாதம் இப்பணிரண்டுமே மேஷம் ரிஷபம் மிதுனம் கக

டகம், சிங்கம், கன்னி, துலாம், விருஷிசும், தனுசு, மகரம் கும்பம், மீனம் இவ்விராசிகளாம் அம்மணேவேந்தன் நவத்து வாரங்களே அம்சம் (எ-று)

குறிப்பு:- ஓரை - இராசி

நல்லிரவி மதியிருக ணங்கி பாக
னற்செவிக ளருமறையோன் வாயே கங்கன்
பொல்லாத சனிகோண மிராகு கேது
புனலோங்கு மிலிங்கமல வாயிலொன்பான்
செல்லுமங் கிஷமென்பர் கரண மாகச்
செப்புமனம் புத்திகாண் சித்தக் தோடு
கொல்லவரு மாங்கார நான்கும் நான்கு
குலமென்பர் வயதுதா னலகிட் டேறே 41

[பொ-ரை] அம்சம் 9ல், சூரியன், சந்திரன் வலக்கண், இடக்கண் செவ்வாய், புதன் வலச்செவி, இடச்செவி, வியாழன் வாய் சுக்கிரன் சனி வலதுராசி, இடதுராசி, இராகு, கேது இலிங்கம், மலவாயிலாம், ஆக அங்கிஷம் ஒன்பதென்று சோல்லுவார். மனம், புத்தி சித்தம், அகங்காரம் இக்காரணங்கள் 4-ம் பிரா்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் என்னும் ஜாதியாம் ஆயுள்கெற்பாயத்தைக் கூட்டிக்கழிப்பதே பூபாலன் வயது (எ-று)

குறிப்பு:- (கூட்டல்-பெருக்லெ் கழித்தல்-வகுத்தல்)

ஏருன பூதமைம் பூதங் கண்டா
யிரவிமதி நோக்காகுஞ் சூத்திரன் காணின்
வாருன பாலயௌ வனமே பூமான்
வருமூப்போ டிறப்பந்து பருவங் காண்க
பேருன குணமூன்றுங் கணங்க ளென்பர்
பேசாத யோகமுச் சுடரே யின்பக்
கூருன பஞ்சகமுந் தொழில்களைந்தே
குறிப்பான பொருத்தமீ திரெட்டாமே 42

(பொ-ரை) வாஸ்துபுருடனுக்கு பிரிதீவு அப்பு தேயு வாயு, ஆகாயம் இப்பஞ்சபூதங்களே பூதங்களாம் சூரியன் சந்திரன் கேந்திரங்களாம் பால யௌவனம், அச்சு விருத்தம், மரணம் இப்பருவங்களைந்தும் சூத்திரமாம், சாத்வீகம், தாமதம், இராசதம் இக்குணங்கள் மூன்றும் தேவ.மனுஷிய ராக்ஷத என்னும் கணங்களாம் சூரியசந்திராக்கினி என்னும் முச்சுடரின் கலைகளே அமுத சித்த மரண மென்னும் யோகங்களாம், பஞ்சகிருத்தியங்களே பஞ்சகமாம் ஆக பொருத்தங்கள் 16 (எ-று)

குறிப்பு:- பஞ்சகிருத்தியங்கள் சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம் திரோபவம், அனுக்கிரகம் என ஐந்தாம்

எட்டான திருமகளார் கிரக வேந்த
 னில்லவரா மலர்பவனே தாரா வென்பர்
கட்டான பொருத்தமிவை பார்த்து நன்றாய்
 கனமான வைந்திடமுங் கொள்ளி னீங்கா
மட்டான திருமகளா ரெண்மரீந்த
 மகத்தான யோகமிவை தாங்கி வாழ்வார்
சுட்டான பொத்தமீ திரண்டுங் கூட்டித்
 தொதுத்ததோர் பலனெலாம் வகுத்துச்சொல்வாம் 43

(பொ-ரை) வாஸ்துபுருஷனுடைய மனைவியர்கள் அஷ்ட லக்ஷிமிகளுமாம், அவர்கள் தரும்பலனே தாராபல னெனப்படும் இவ்விரண்டுபொருத்தங்கூட்டி நகரம்,கோவில் வீடு தடாகம், கூபம் இவைகளை நிருமித்தால் அஷ்டலக்ஷிமிகளாலுங் கொடுக்கப்பட்ட போகங்களையனுபவித்து வாழ்வார்கள் இனி பொருத்தங்கள் பதினாறின் பலனைச் சொல்வாம் (எ-று)

குறிப்பு:- இவக்குமி. தாரா இலவிரண்டால் செல்வமே அதிகப்படுமென்றறிக.

## கெற்பம்

சொல்லவே யிடமைந்துங் கொள்ள வெண்ணின்
சுகமான பக்கமோர் நான்கு மொப்பாய்
மெல்லவே யளந்துநீ யிருசார் பான
வியன்மேவு மிருதொகையைப் பெருக்கிக் கண்ட
நல்லதோர் கெற்பமே துருவ மாயம்
நலமான குழியாக மெட்டிற் ருக்க
வல்லநீ ளொனல் யிருநா லென்ன
மருவுசீர்ப் பலனெலாம் வகுப்பக் கேன்மின் 44

(பொ-ரை) நகரம் கோவில் வீடு தடாகம் கூபம் இவ்வைந்திலொன்று நிருமிக்கவெண்ணி மூகூர்த்தஞ் செய்த காலத்த- அந்தந்த மனையின் நாற்புறமும் ஒற்றுமைப்பட அளந்து இருபக்கத்தினளவைக்கூட்டிக் கண்ட தொகையை கெற்பமாம் அஃது துருவம் ஆயம் குழி எனவும்படும் அக்கெற்பத்தை 8ல் கழிக்க அஃது துருவ கெற்பமாம் அக்கெற்பம் 1 முதல் 8 ஈருக வரும்பலனைச் சொல்வாம் எ-று

குறிப்பு:- கீழ்மேல் ஓரகுவாகவும் தென்வடல் ஓரளவாகவும் அல்லது நான்கு பக்கமும் ஓரளவாகவும் இருப்பதே உத்தமாம் அஃதல்லாது குழிமரியம் எனப்படும் குழி முறியல் அதமமென்றறிக கூட்டல் கழித்தல் இவ்விரண்டும் சிற்பர்களால் வழங்கி வரும் சொற்களாம்

மின்ருரு மொன்ருதி கருட கெற்ப
மேகவா கனன்வீடு சுகமே மிக்கப்
பொன்ருரும் கீட்டிசையா மூன்றி னில்லம்
புகழான சிம்மத்தின் கெற்பங் கண்டாய்
தென்ருங் கூற்றுவனுர் திசையே மிக்க
ஜெயமென்ப ரைந்தாகுந் திசையே மேல்பாற்
சொன்ருரும் வருணன்ருன் சர்ப்ப கெற்பஞ்
சுகவாருய்த் தனவாருய்ச் சுகிப்பன் ருனே 45

(பொ-ரை) 1க்கு கெற்பம் கருடன், தெய்வம் இந்திரன் திரை, கிழக்கு; இதில், மிகுந்த சுகமுண்டாம் 3க்கு கெற்பம் சிங்கம், தெய்வம் எமன், திசைதெகே, இதில் மிகுந்ப ஜெய முண்டாம். 5க்கு, கெற்பம் சர்ப்பம், தெய்வம் வருணன் திசை மேற்கு இதில் தனவானுய்ச் சுகத்துடன் வாழ்வான் (எ-று)

குறிப்பு:- கீழ்ப்பக்கம் கருடசாரியென்றும் மேற்பக்கம் நாகசாரியென்றும் வடபக்கம் யானைசாரியென்றும், தென் பக்கம் சிம்மசாரியென்றும் சொல்லப்படும். கருடசாரியில் நாகமனையும் நாகசாரியில் கருடமனையும் சிம்ம சாரியில் யானைமனையும், யானைசாரியில் சிம்ம மனையும் போடலாகாது போட்டால் அவ்வீடு முதல் 5ம் பாழ்படும் எ-று

தானுது மேழிடமே வடபா லியானை
தந்ததோர் கெற்பமே யளகை கோமான்
மேனுடுங் குணக்காதி நான்கு வீடு
மிக்கமனை மக்களோ டின்ப போகம்
வானுடு தான்கொள்வர் சுகமா மிக்க
மன்னரா மிரண்டுதிக் கடவு டயே
தானுதந் திசைகெற்பம் புருவே கண்டாய்
தனமில்லை யனல் கொள்ளும் வேடர்க்காமே 46

[பொ-ரை] 7க்கு கெற்பம் யானை, நெய்வம் குபேரன் திசை வடக்கு இதில் குபேரசம்பத்துண்டாம், இந்த நான்கு கெற்பங்களில் இடம், பொருள், ஏவலோடு சுகமே வாழ்ந்து அரசராவார்கள் 8க்கு, கெற்பம் புரு, தெய்வம் அக்கினி. திசை தென்கிழக்கு இதில் தனநஷ்டமும் அக்கினிபயமுண் டாகும். இஃது வேடருக்காம் எ-று

குறிப்பு:- புருகெற்பம், வேடர், வில்லியர், மறவர், வஞ்சரர் இவர்களுக்காம்

ஆமேவு நிருதிபாற் சுவான கெற்ப
மானதென் மேற்குநான் காய தக்கி
னுமேவு குறவர்க்காம் வடமேற் காறி
னலவாயு கெற்பமே காக்கை யென்பர்

பூமேவு நீ சர்க்காம் வடகீ ழென்னப்
புகலுவா ரெட்டினற் கெற்ப மீசன்
ருமேவு கழுதைவீ டியார்க்கு மாகாச்
சனியான நால்வீடும் போய்வீடாமே 47

(பொ-ரை) 44க்கு கெற்பம் சுவானம் தெய்வம் நிருதி, திசை தென்மேற்கு இஃது குறவர்களுக்காம் 6க்கு கெற்பம் காக்கை, தெய்வம் வாயு திசை வடமேற்கு இஃது நீசர்களுக்காம் 3க்கு கெற்பம் கழுதை தெய்வம் ஈசானியன் திசை வடகிழக்கு. இஃது எவர்களுக்கு மாகாது 2. 4, 6. 8. இந்த நான்கு கெற்பங்களும் பேய்கள் வாசஞ்செய்யப்பட்ட இடங்கள் (எ-று)

குறிப்பு:- காக்கை கெற்பத்தில் பறைச்சேரி அமைத்தல் நலனும்

## 2. ஆதாயம்

விட்டிலுய ராயத்தை யெட்டிற்கூட்டி
விளங்குமீ ராறினுற் கழிப்ப நின்ற
கூட்டுமொன்ருதியீ ராறிருய
குணமேவு மாதாய பலனே சொல்லி
நாட்டுவாஞ் சுகத்தோடு மனமே பரக்யம்
நலமான கீர்த்திசேய் வசியம் போகம்
வீட்டின்மெஞ் ஞானமே தான்யஞ் செல்வம்
வீரியம் சம்பத்தோ டீராருமே

(பொ-ரை) ஆயத்தை-8-ல், கூட்டி 12-ல் கழிக்க ஆதாயமாம். ஆதாயம்-1-முதல் 12-வரையில் உள்ள பலன்கள் முறையே 1-சுகம் 2-தனம். 3-பாக்கியம் 4-கீர்ந்தி. 5-புத்திரர் 6-வசியம் 7-போகம் 8-ஞானம், 9-தான்யம். 10-செல்வம் 11-வீரியம் 12-சம்பத்து.

குறிப்பு:- /ஆதாயம்-இலாபம்,)

7 ஆகாதென்பாருமுளர்———

## 3. விரையம்

ஆமருவு கெற்பத்தை யொன்ப தாகு
மலகினுற் ருக்கயீ ரைந்திற் கீய
பூமருவு விரையமாம் பலனே தென்னின்
பொல்லாத வறுமைதீ தாக்கத் தோடு
வான்மருவு போகமே சாவா மிக்க
வாதாயம் விரையமே தனமு நாசம்
நீண்வருவு சம்பத்தோ டுரைந் தான
நிலைசொன்னேன் யோனிவளர் பலன்சொல்வேனே 49

(பொ-ரை) கெற்பத்தை 9ல், கூட்டி 10ல், கழிக்க விரையமாம் விரையம் 1 முதல் 10 வரையில் உள்ள பலன் கள் முறையே, 1 வறுமை 2 தீது 3 செல்வம் 4 போகம். 5 சாவு 6 ஆதாயம், 7 செலவு, 8 தனம், 9 நாசம் 10 சம் பத்து இனியோனி பலன் சொல்வாம். (எ-று)

குறிப்பு...(விரையம் செலவு)

## 4. யோனி

சொல்லரிய துருவத்தை மூன்றிற் கண்ட
தொகையதனை யெட்டினுற் பகுப்ப நின்ற
நல்லவெட் டுருய யோனி சொல்வாம்
நலமேவு குணக்காதி தேவர் கோமான்
வல்லவீ டுயர்கருடன் யோனி நல்ல
மனையாதி செல்வமிகு பாக்கியந் தென்கீ
ழல்லல்படு பூனைதீ யோனி வீட்டி
லணியாடைதனமிலான் குணமி லானே 50

(பொ-ரை)துருவத்தை 3ல் கூட்டி 8ல், கழிக்க யோனி யாம் இதன் பலன் 1க்கு கிழக்கு இந்திரன், கருடயோனி

இதில் நற்குண மனைவி மக்களோடு பாக்கியமுள்ளவர்களா வார்கள் 2க்கு தென்கிழக்கு அக்கினிமூலை, பூனையோனி இதில் வஸ்திராபரண தனமில்லாத வறுமையுடையவர்களா வார்கள் (எ-று)

குறிப்பு - இஃது திசையோனியாம், ஒற்றைப்படை எண்ணால் வரும் குழியே கருடன் நாகம். சிம்மம்' யானை இவைகளிலொன்றும். இரட்டைப்படை எண்ணால் வரும் குழியே பூனை, சுவானம், எலி முயல் இவைகளிலொன்றும். முதல் நான்கும் உத்தமம் கடைநான்கும் அதமமெனப்படும். ஆதலால் இந்நூலில் இரட்டைப்படை எண்களை நீக்கி ஒற்றைப்படை எண்களாலமைந்தபொருத்த அட்டவணை யும் பின்னால் குறிக்கப்பட்டுள்ளன

ஆனமூன் றிடமேமன் சிம்மயோனி
யாவசியே பொருளோடு ஜெயமே கொள்வ
ரீனமார் நிருதிதென் மேற்கு நான்கா
மிடம்யோனி நாயென்பர் பிணியா மிக்க
தானமைந் தானமேற் கான வீட்டிற்
சர்ப்பமே யோனியாம் புனலின் வேந்த
னனவிடந் தனலாபம் பூமி லாப
மடைவனா றிடந்தீது முடிவு சொல்வாம் 51

(பொ-ரை) 3க்கு தெற்கு, எமன். சிங்கயோனி, இதில் தனமும் ஜெயமிமடைவார்கள் 4க்கு தென்மேற், நிருதி, சுவானபோனி இதில் நோயடைவார்கள் 5க்கு மேற்கு, வருணன் சார்பயோனி இதில் தனலாபமும் பூமிலாபமுமுண் டாம் இனி 6ம் இடம் தீங்குளதாம் இனி அதனையும் கொன் வாம் எ-று

குறிப்பு:- பூனைசாரியில் எலிமனையும் எலிசாரில் பூனையி மனையும் சுவானசாரியில் முயல்மனையும் முயல் சாரியில் சுவானமனையும் போடலாகாது, தீங்குண்டாம் இஃது இரட் டைப்படைமனையாம்

சொல்லாறி னில்லமே வடமேற் கான
சுடர்யோனி யெலிவாயு தனமே யில்லான்
பொல்லாதமல் குரவு வடபா லேழின்

புகழ்மேவு நிதிமன்னன் யானை யோனி
செல்லாருங் கீர்த்திவளர் ஞானம் யோகம்
ஜெகமெச்சுந் தனமுனான் வடகீ ழான
சொல்லெட்டி னீசானன் முயலின் யோனி
சுகமிலான் றனமிலான் குலமி லானே. 5

(பொ-ரை) 6க்கு வடமேற்கு, வாயுமூலை எலியோ
இதில் மிகுந்த தரித்திரமாம் 7க்கு வடக்கு, குபேரன், க
யோனி இதில் கீர்த்தி ஞானம் யோகம் பாக்கியமுண்டா
8க்கு வடகிழக்கு, ஈசானன்,முயல் யோனி. இதில் தரித்தி
ஞய் ஜாதகப்பிரஷ்டனுவான் (எ-று)

குறிப்பு:- பூனை, சுவானம், எலி முயல் இவை நான்கு
கடைமனை என்றும் கோடிமனை என்றும் உருத்திர மனை என்
றும் இரட்டைமனை என்றும் இராக்ஷதமனை என்றும் பிசா
மனை என்றும், அஷ்டகோணமனை என்றும், சாதல்மனை
என்றும் சொல்லப்படும்

## 5. வாரம்

குலமேவு கெற்பத்தை யொன்ப தாலே
குணனமே செய்தபின் னேழி னுலே
தலமேவு பாகாரஞ் செய்தொன் றேழிற்
சனியீருய் வரும்நாளே வார மென்பர்
நலமேவு திங்கள்புதன் வியாழன் வெள்ளி
நன்மையாம் சுகமிக்க சனிசே யாகா
மலமேவு துயரீவ ரருக்க னுளே
மத்திபத்தி னன்றென்பர் மதிவல் லோரே 53

(பொ-ரை) கெற்பத்தை 9, கூட்டி 7ல் கழிக்க வார
மாம் இதில் திங்கள், புதன் வியாழன், வெள்ளி இந்த வாரங்
கள் மிகுந்த நற்பலனைத்தரும் சனி, செவ்வாய் இவ்விரண்
டும் துக்கத்தைத்தரும், ஞாயிறு மத்திபத்தில் நன்று (எ-று)

குறிப்பு:-ஞாயிறு பிதிரார்ஜ்ஜித சொத்தை விருத்திசெய்யும் ஆதலால் அவ்வாரம் உத்தமமெனப்படும்

## 6. திதி

வல்லதோ ராயத்தை நான்கி னாலே
மதித்துப்பின் முப்பதாற் பாகஞ் செய்யத்
தொல்லைதிதி பூர்வமே யமர பக்ஷந்
தொடர்ந்ததேமுப்பதாம் பலனே தென்னின்
புல்லொனுத் திதியொன்று நான்கெட்டொன் பான்
புகழிலாப் பதினுலும் புதிரினுளுஞ்
சொல்லுமிரு பக்ஷமே சொன்ன நாட்க
டொலையாத துன்பமே கவலை கொள்வான் 54

(பொ-ரை) ஆயத்தை 4ல் கூட்டி 30ல் கழிக்க முன் 15ம் பூர்வபட்சதிதிகளாம் பின் 15ம் அமாபட்சதிதிகளாம் நவமி சதுர்த்தசி அமாவாசை இவ்வாறு திதிகளும் அதிக துன்பத்தையும் கவலையும் தரும் (எ-று)

குறிப்பு:-வாஸ்துபுருடன் வலதுகரமாகிய பூர்வபட்சமே உத்தமமாம், இடதுகரமாகிய அமரபட்சமே மத்திபமாம், (பூர்வபட்சம் வளர்பிறைசுக்கிலபட்சம் அமரபட்சம் தேய்பிறைகிருஷ்ணபட்சம்)

## 7. நட்சத்திரம்

வான்மேவு குழியதனை தொகுப்பா யென்டின்
வகுப்பதோ ரிருபத்தே ழலகிற் காணப்
பூமேவு பரணிகார்த் திகையா யில்யம்
புகழிலா மகம்பூரம் கேட்டை கொக்கோ

டாமேவு பூராடம் பூரட்டாதி
யானதோ ரொன்பதுவுந் தீதா மிக்க
கான்மேவு பேய்பூதங் கொள்ளும் வீடே
கனமிலான் றனமிலா னினமில் லானே, 55

[பொ-ரை] குழியை 8ல் கூட்டி 27ல் கழிக்க நட்சத்திர மாம். பரணி,கார்த்திகை ஆயில்யம் மகம், பூரம், கேட்டை மூலம், பூராடம், பூரட்டாதி இவ்வொன்பதும் தீயனவாம், வீட்டில் பேய் பூதம் வாசஞ்செய்யும், பெருமை செல்வம், சுற்றமிவை யில்லாதவனுவன் [எ-று]

குறிப்பு:- இவ்வொன்பது நட்சத்திரங்களுக்கும் கண் களில்லை

## 8. இராசி

ஆனதோ ராயத்தை யேழி னுலே
யளந்துபனிரண்டினுல் வகுப்பி ராசி
னீனமிகு மோரையாம் புருட ராகா
ரின்னலே யாமென்பா நான்கி னுலே
மானமாய்த் தொடுத்துப்பின் பனிரண்டாலே
வகுப்பரேலோரையாந்திரைய மூன்றி
லூனமிலா வுபயமே. திரஞ் சரந்தாம்
உத்தமம் மத்திபம் அதமந் தானே 56

[பொ-ரை] ஆயத்தை 7ல், கூட்டி 12, கழிக்க இராசி யாம் அவ்வாறு கழிக்கப்படும் இராசி, புருஷராசிகளாதலால் அவை துன்பத்தை விளைவிக்கும் என்றறிக. ஷ ஆயத்தை 4ல் கூட்டி 12ல், கழிக்கப்படுவதே உலகவியல்பாதலால். அதுவே உத்தமம் அவற்றில் உபயராசி உத்தமம் தரராசி மத்திபம் சரராசி அதமம் (எ-று)

குறிப்பு:- புருஷராசிகள் மேஷம், மிதுனம் சிம்மம் துலாம் தனுசு, கும்பம் இவ்வாறுமாம்.

## 9. அங்கிஷம்

தானாகுங் குழியதனை நான்கி லூட்டிச்
சமூகத்தை வீட்டுவா யொன்பதாலே
வானாட்டினங்கிஷமே யொன்ப தாலே
வளராதி தஸ்கரனா மிரவி தீயன்
ஆனாகு மிரண்டதாம் புத்தி சோம
னதிசெல்வ மூன்ருகுஞ் சத்தி செவ்வாய்
தானாகும் நன்மையீ ரீராம் புந்தி
தக்கதோர் புஷ்கரனார் தானய முண்டாம் 57

(பொ-ரை) குழியை 4ல் கூட்டி ல், கழிக்க அங்கிஷ மாம் 1க்கு சூரியன் தஸ்கராங்கிஷம் தீங்கு செய்வன், 2க்கு சந்திரன் புத்தியாங்கிஷம் செல்வமுண்டாம் 3க்கு செவ் வாய் சத்தியாங்கிஷம் நன்மையாம். 4க்கு புதன் புஷ் ராங்கிஷம் தான்யமுண்டாம் (எ-று)

குறிப்பு:- இஃது நவக்கிரகாங்கிஷம் எனப்படும்

ஆமைந்து வேந்தனா ரிராஜ்ஜியம் க்ஷேம
மாறுகவி போகமே யோக மேழி
னாமமே பிணியாளர் முடவனோயாம்
நாமிலா வெட்டதுவே தரித்ர ராகு
ஏமமே போமென்ப ரொன்ப தாக
வியைந்த சுககேதுவாம் பயனே தென்னி
னேவியுள தனங்கொள்வர் க்ஷேம மிக்க
நிலயான வங்கிஷத்தின் பலனா மென்னே 58

(பொ-ரை) 5க்கு வியாழன், இராஜ்ஜியாங்கிஷம் மேக்ஷ முண்டாம், 6க்கு. வெள்ளி, போகாங்கிஷம் யோகமுண்டாம் 7க்கு, சனி பிணயாங்கிஷம் நோயுண்டாம் 8க்கு ராகு

தரித்திராங்கிஷம் பொருள் நாசமம் 9க்கு கேது, சுகாங்ஷம் தனவிருத்தியும் க்ஷேமமுண்டு எ-று

குறிப்பு:- சுக்கிராங்கிஷம் துக்கம் எனச்சிலநூல்களிற் சொல்லப்படுகின்றன அவ்வாறு சொல்லின், மனைக்கதிபதி சுக்கிரனுதலால் அக்கிரகத்தால் கொடுக்கப்படுமனையும் துக்கப்படும் என்பதாம் ஆதலால் காக்கையர்வாக்கே உறுதி யெனக் கொள்க

## 10. ஜாதி

என்னவே குழியதனை யொன்ப தாலே
யினமாக்கி நான்சிற் பாகாரஞ் செய்யின்
மன்னுசீர் வருணமாம் பிர்ம க்ஷத்ரிய
வைசியர் சூத்திரரென்ப ருலகிலுள்ள
வின்னநாற் சாதிக்கு முறையே கொள்க
வியல்பான முதற்சாதி பொதுவே யெனபர்
மன்னனு மிரண்டோடு மூன்றும் நன்று
மத்திபமாய்ச் சூத்திரரை மதித்தி டாயே 59

(பொ-ரை) குழியை 9ல் கூட்டி 1ல் சழிக்க ஜாதியாம் பிர்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரரென்றும் ஜாதி 4ல் பிராமணஜாதி 4 வருணத்தார்க்கும் பொதுவாம் பிர்மனித்திரிய வைசியர் இம்மூன்றும் உத்தமங் சூத்திரர் மத்திபம் எ-று

குறிப்பு:- பிர்மக்ஷத்திரிய வைசிய சூத்திரர் இந்தநான்கு ஜாதியாருக்கும் அந்தந்த ஜாதிமனையேகூட்டுவதுஉத்தமம், அஃதல்லாதது மத்திபமாம் அந்நிய பிந்துவுக்குப்பிறந்தவர்கள் உயர்ந்த சாதியாராயினும் அவர்களைச் சூத்திரரெனக் கொள்க

## 11. ஆயுள்

ஆயந்தைத் தொகுத்திருபத் தேழிற் கண்ட
வலமையே நூறினுல் வகுப்பி ராயின்

றூயதோ ராயுளா மிருபத் தேழிற்
சுகங்காணூர் மேலோடி னன்ரு மென்பர்
கோயிலுந் தேயமும் மொன்று பத்தாங்
குறிப்பான கல்வீடு தடாகங் கூபம்
தேயமிகு மூன்ருகுங் கூரை வீடு
நின்றதோர் பலன்சொல்லி னென்றுக்கொன்றே 60

[பொ-ரை] ஆயத்தை 27ல், கூட்டி 100ல் கழிக்க ஆயுளாம் வயது 1 முதல் 27 வரையில் சுகமில்லை அதற்கு மேல் நன்மை உண்டாம் நகரம் கோவில் வயது 1க்கு 10 ஆகவும் கல்வீடு தடாகம் கூபம் வயது 1க்கு 3 ஆகவும் கூரைவீடு வயது ஒன்றுக்கொன்ருகவும் கொள்க எ-று

குறிப்பு:- ஆயுளை 400ல், கழிப்பாருமுளர் அவ்வாறு செய்ய நூலிளுதாரமும் இல்லை என்பதாம் கருங்கல்லாற் செய்த கோவில் முதலானவைகளுக்கு வயது 1க்கு 100 ஆகவும் செங்கல்லாற் வீடு முதலானவைகளுக்கு வயது 1க்கு 10ஆகவும் மண்ணாற் செய்பி வீடுகளுக்கு வயது ஒன்றுக்கொன்ருகவும் கொள்வது முண்டாம்

## 12. பூதம்



ஒன்றியதோர் கெற்பத்தை மூன்ருற் கூட்டி
யுணர்லாகு மைந்திளுல் வகுப்பி ராயி
னின்றதோர் பூதமே யைந்நீருக
நிலையுள்ள பிரிதிவோ டப்பு தேயு
பொன்ருத வாயுவா காய மைந்தின்
புலமேருங்கு செல்வஞ்சந் தோடஞ் சாத
னன்ருன வாதாயஞ் செலவு கூட்டி
நலங்கண்டார் முறையேநற் பலன் கண்டாரே 61

(பொ-ரை) கெற்பத்தை 3ல், கூட்டி 5ல், கழிக்கப் பூதமாம் பிரிதிவு செல்வம், அப்பு சந்தோஷம், தேயு சாவு,வாயு

ஆதாயம் ஆகாயம், செலவு இவை ஐம்பூதங்களின் பலன் எ-று

குறிப்பு:- பர்ன்னகசாலைக்கு ஞ்காயதத்துவமே நற் பலனான ஞானத்தைத்தரும். (எ-று)

---

## 13. நேத்திரம்

கண்டதோர் நேத்திரமே யருக்கன் றெட்டுக்
கணக்கிட்ட தொகைபதனை மூன்றினாலே
பிண்டமாங் குணனமே செய்து காணப்
பெரிதான தொகையதனிற் பரிமா தொட்டுக்
கண்டதொகை நீக்கிடிலே வொன்பா னொற்னறக்
கருதுமீ ராறுமே யிரண்டா மற்றை
விண்டதோ ராறுமே குருடர் கண்டாய்
விளங்குமிரு கண்ணுளார் நலங்கொள்வாரே 62

(பொ-ரை) ஆதிவாரமுதல் அன்றையவாரம் வரையில் வந்த தொகையை 3ல், கூட்டி அத்தொகையை அசுபதி முதல் எண்ணித்தள்ளியபின், அப்பால் நட்சத்திரங்கள் 9ம் ஒற்றைக்கண் மேல் 12ம், இரட்டைக்கண், அவற்றிற்கு மேல் 6ம் குருட்டுக்கண்களாம் இருகண் உள்ள மனையேநன் மனையாமெனக் கொள்க (எ-று)

குறிப்பு:- வீடு தடாகம் கூபம் இவைகளுக்கு ஒரு கண் ணுள்ளனவாயினும் நன்மை உண்டாகுமெனச் சொல்வாரு முளர்

---

## 14. சூத்திரம்

வாரேறும் பூண்முலையாய் சூத்ரங் கேட்பாய்
வளர்ந்ததோர் கெற்பத்தை யைந்தி னாலே

பேரேற வகுப்பதென வியாசன் சொன்னான்
பிறந்த மனை யாயுவையே பருவ மைந்தாற்
சீரேற வகுப்பதென பிரமன் சொன்னான்
செப்பரிய குழியபிலை யலகெட்டாலே
பாரேற தொகுத்துப்தன் பருவத்தாலே
பகுப்பதென ஜெயமுனிவன் பகர்ந்திட்டானே. 63

[பொ-ரை] கெற்பத்தை 5ல், கழிக்க சூத்திரம், என்று வியாசர் சொன்னார் மனையின் வயதை 5ல் கழிக்க சூத்திரம் என்று பிரமதேவர் சொன்னார் குழியை 8ல் கூட்டில் கழிக்க சூத்திரமாம், என்று ஜயமுனிவர் சொன்னார் எ-று

குறிப்பு:- வியாசர், பிரமதேவர் ஜெயமுனிவர், விஸ்வ கர்மா, இவர்கள் சொன்ன நான்கு வகையும் உலகவழக்கத்தில் ஏற்பட்டிருத்தலால் அவைகளால் பிரமதேவர் சொன்ன கலைக்கியான சிற்பமெ முதனூலாம் அவ்வழி நடப்பதே நற்பயனைத்தரும். (எ-று)

ஆனதோ ராயத்தை யேழினாலே
யளந்தைந்தால் வகுப்பதென கருமன் சொன்னான்
வான்முயர் தந்தையே சொன்ன வாக்கு
மகிதலத்தி லாமென்ன பிறகு பொன்னேன்
ருனமுயர் மனுவாதி வசிஷ்டன் சுங்கன்
சமனேடு யானுமே தேவர் கோமான்
மானமிகு சபையேறி நன்று மென்ள
வகுத்திட்ட சூத்திரத்தின் வகை சொல்வேனே 64

(பொ-ரை) ஆயத்தை 7ல், கூட்டி 5ல் கழிக்கசூத்திரம், என்று விஸ்வகன்மா சொன்னார். பீருங்கு மகாரிஷி, வியாழ பகவான், மனுச்சக்கரவத்தி, வசிஷ்டர் சுக்கிரபகவான் எமதருமராஜன் காக்கையர் இவர்கள் தேவேந்திரன் பசை

யின்கண் சூத்திரத்தின் வகையைப்பேசி இப்பூமண்டல த்தின் கண் பிரமதேவர் வாக்கே நன்மையும் உறுதியுமுள்ள தென்ருர்கள். ஆதலால் அவ்வாறமைந்துள்ள சூத்திரத்தின் வகையைச்சொல்வேன் (எ-று)

குறிப்பு:- சூத்திரம் என்பது நகரம், கோவில், வீடு தடாகம் கூபம் இவ்வைந்தையும் சூத்திரக்கயிறிட்டாடச் செய்வதே சூத்திரமாம்

சூத்திரமின்றி ஆடலுமில்லை என்றறிக

வகைமேவு பூவுலகு லாயுள் மட்டும்
வகுத்ததோர் பருவமே யைந்தா மென்னத்
தகைமேவு பாலசெள வனங்கௌ மாரஞ்
சரிந்ததோர் விருத்தமே மரண மைந்தி
னகைமேவு முதன்மூன்றுஞ் செல்வங் கொள்வர்
நலமிலா விரண்டுமே தனமுமில்லார்
வகைமேவு நகரமுதற் கூப மிருய்
வகுத்திட்டேன் சூத்திரத்தின் வகையீதாமே 55

[பொ-ரை] இப்பூவுலகின்கண், நகரம், கோவில் வீடு தடாகம், கூபம் இவ்வொவ்வொன்றின். ஆயுள்மட்டும் பால யௌவனங் கௌமார விருத்த மரணம் என்னும் பருவங்க ளைந்தாம் இவற்றில் பால யௌவன கௌமாரம் இம்மூன்றில் செல்வமும் நண்மையுமுண்டாம் விருத்த மரணம்இவ்விரண் டில் செல்வங்குன்றிப்போம் எ-று

குறிப்பு:- பால யௌவன கௌமார விருத்த மரணம் இவை முறையே, சந்தோஷம், மணம், செல்வம், பீடை, மரணம் எனச்சொல்லும் நூல்களுமுள்ளன,

# 15. கணம்

---

எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்

வேறுசந்தம்.

தாமமுய ரகபதிநாண் மிருகசிரம் புனர்தந்
    தையத்தஞ் சோதிபனை தருவோணம் நரவாய்
வாமமுயர் தேவர்கணம் பொருளெலாங் கொள்வர்
    வளர்பரணி ரோகணிநா ளாதிரையு மூன்று
நேமமுய ருத்திரங்கண் முப்பூர மக்க
    ணிலைனா கணமென்பர் பொருளின்பங்கொள்வர்
வாமமுய ரளகுபய ருனிகள் கவிட்ட
    மாகேட்டை செக்கரவு கொடியரக்கர்மிடியே    66

(பொ-ரை) அசுபதி, மிருகசிரம் புனர்பூசம், பூசம் அஸ்தம், சுவாதி, அநுஷம். திருவோணம், ரேவதி இல்வொன்பதும் தேவகணமாம். இவற்றில் மிகுந்த பொருள் உண்டாம் பரணி, ரோகணி, திருவாதிரை, உத்திரம் உத்திராடம், உத்திரட்டாதி, பூரம்,பூராடம், பூரட்டாதி,இவ்வொன்பதும் மனிதகணமாம், இவற்றில் பொருட் சுகமடைவர். கார்த்திகை சித்திரை, மூலம், விசாகம் அவிட்டம், கேட்டை. சதையம், ஆயில்யம் மதம், இவ்வொன்பதும் இராக்ஷகக்ணமாம்-இவற்றில் தரித்திரமுண்டாகும் (எ-று) (ஆனி-மூலம்) (கொடி-மகம்)

குறிப்பு:- நகரம், கோவில். வீடு, தேவகணம்: தடாகம் கூபம் மனிதகணம். இவ்வாறமைவிப்பதே. நற்பலனை தரும் என்று சொல்வாருமுளர் தலைவன் கணம் பகையில்லாது பார்ப்பதே நன்றும்.

8

## 16. யோகம்

.........

ஏழ்பரியோன் வாரத்தி லுரோகணிதா ளத்த
மிரேவதிமூன் றுத்திரங்க ளாநிதிரு வோணம்
வாழ் வீலுயரமுதநாட் கேட்டை மகம் விட்டம்
வைகாசி யனுடமே மரணமிகு யோகம்
போழ்நிலவு வாரத்திற் சோதியுரு கோணம்
புநர்தமைந் தானமே யமுதநா ளென்பர்
தாழ்விலெரி யணுத்தி ராடமே பூரட்
டாதிமகம் விசாகமேமரணமெனச் சொல்வார் 67

(பொ-ரை) ஞாயிற்றுக்கிழமையில் உரோகணி, அஸ் தம், இரேவதி உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, மூலம் திருவோணம் இவை வரின் அமுதயோகமாம் கேட் டை மகம், அவிட்டம் விசாகம். அநுஷம் இவை வரின் மரணயோகமாம் இவற்றிற் சொல்லாத நட்சத்திரங்கள் சித்தயோகமாம், திங்கட்கிழமையில் சுவாதி, உரோகணி திருவோணம், புநர்பூசம், மிருகசிரம் இவைவரின் அமுத யோகமாம் கார்த்திகை உத்திராடம், பூரட்டாதி மகம் விசா கம்இவைவரின்மரணயோகாமம்இவற்றிற் சொல்லாதநட்சத் திரங்கள் சித்தயோகம் (எ-று) (விட்டம் அவிட்டம்)

குறிப்பு:- அமுதசித்தமரணயோகமே, உத்தமம் அத மம் எ-று

வாரகுச னுடிபங் குனிசகட மூலம்
வரினமுத யோகமா திரைசதைய முற்றின்
வீரமுயர் நாழிவரின் மரணமாம் புதனின்
மிக்கவுந் திரமாடி முப்பூர மார

லோமுயாமுதமா மிரேவதிநா ளத்த
மிரலையா வணிமூல மரணம்பொன் சென்னி
யாரமெரி பூசமகஞ் சோதியமு தயனு
ளங்கிசிர மாதிரையுத் திரஞ்சதைய மரணம் 68

(பொ-ரை) செவ்வாய்க் கிழமையில் உத்திரட்டாதி, உத்திரம், ரோகணி, மூலம் இவை வரின் அமுதயோகமாம் திருவாதிரை, சதையம், விசாகம், பூரட்டாதி இவை வரின் மரணயோகமாம் புதன்கிழமையில்உத்திரம், உத்திரட்டாதி பூரம்,பூராடம், பூரட்டாதி கார்த்திகை இவை வரின் அமுத யோகாமம் இரேவதி,அஸ்தம், அசுபதி, அவிட்டம், மூலம் இவை வரின் மரணயோகமாம் இவற்றிற் சொல்லாத நட்சத்திரங்கள் சித்தயோகமாம். வியாழக்கிழமையில், அசுபதி, புநர்பூசம், பூசம், மகம், சுவாதி இவை வரில் அமுதயோக மாம். ரோகணி கார்த்திகை மிருகசிரம், திருவாதிரை உத்திரம் சதையம் இவை வரின் மரணயோகமாம். இவற்றில் சொல்லாத நட்சத்திரங்கள் சித்தயோகம் (எ-று)

குறிப்பு:-அமுத சித்தமரணயோகமே பிங்கலை இடைகலை சுழுமுனை (எ-று)

சதமேவு சுக்கிரனு ரத்தமொடு நாவாய்
தங்குபரி மூலமே யமுதமிகு குருநாள்
பதமேவு கௌவைசக டோணமகங் கேட்டை
பரிவான மரணமே சனிவார மயனுன்
கதமேவு சோதிமகம் போரார லமுதங்
கையரவு சித்திரையுத் திரம்நாழி பெண்ணை
யதமேவ மரணமே லுடுசித்த யோக
மாமென்பர் கலையோங்கும் பலனுகு மென்னே 69

(பொ-ரை) வெள்ளிக்கிழமையில் அஸ்தம், ரேவதி
அசுபதி மூலம் இவைவரின் அமுதயோகமாம் பூசம் ஆயி
லியம், ரோகணி, திருவோணம், மகம் கேட்டை இவைவரின்
மரணயோகமாம் இவற்றிற் சொல்லாத நட்சத்திரங்கள்
சித்தயோகமாம், சனிக்கிழமையில் ரோகணி சுவாதி மகம்.
சதையம் கார்த்திகை இவைவரின் அமுதயோகமாம் அஸ்
தம், ஆயிலியம் சித்திரை, உத்திரம் உத்திரட்டாதி, ரேவதி
இவை வரின் மரணயோகமாம் இவற்றிற் சொல்லாத நட்சத்
திரங்கள் சித்தயோகம் (எ-று) போர்-சதையம் (கலை-சூரிய
சந்திராக்கினி)

குறிப்பு:- அமுதசித்தமரணயோகமே வாதபித்தசிரேஷ்
டமாம்: (எ.று)



## 17. பஞ்சகம்

.........

எண்சீர்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்

என்னவே பஞ்சகமுஞ் சொல்லக்கேண்மி
என்னவே பஞ்சகமூஞ் சொல்லச்கேண்மு
மன்னவே கூட்டியோர் நவந்தி லிய
மகத்தான மூன்றைந்து மேழே யொன்பான்
றுன்னுநிட் பஞ்சகமே யொன்றி ரண்டுந்
றாயநா லாறெட்டு முறையிற் சொல்வா
மன்னதே மரணந்தீ ராஜன்சோர
னுனதே ரோகமிவை தீதா மன்னே 70

(பொ-ரை) பஞ்சகமாவது:-வாரம் திதி, நட்சத்திரம்.
இராசி இவற்றின் தொகைகளை ஒன்றுபடக்கூட்டி 9ல் கழிக்க
பஞ்சகமாம், இவற்றில் 3, 5, 7, 9 நிஷ்பஞ்சகம்; 1, மரண
பஞ்சகம், 2. அக்கினிபஞ்சகம்; 4, இராஜபஞ்சகம்; 6 சோர
பஞ்சகம், 8' ரோகபஞ்சகம்; என்பதாம், 3,5,7, 9, உத்த
மம், 1 2, 4, 6, 8, அதமமாம், எ-று

குறிப்பு:- இப்பரதகண்டத்திற்கு வாரம். திதி நட்சத்திரம் இராசி இந்நான்குமே பஞ்சகமாம்

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

வேறுசந்தம்

தீதான பஞ்சகமுஞ் செங்கதிரோன் வாரஞ்
சேரிலோ மூவைந்து திங்களுயர் பத்தா
மீதான தீவண்ண னீராறு நற்கோண்
மேற்கோளு நான்கென்பர் பொன்வெள்ளியெட் டாம்
போதான துருவமே கூட்டிவன ரொன்பான்
போக்கிய நின்றதுவும் பஞ்சகம தாகு
மீதான வாரத்தி ஞேயண்ண றியும்
விடலே சோரமிவைதோடமெனக் கொள்வாய் 71

(பொ-ரை) 1 2 5 6 8 இப்பஞ்சகங்கள் வருமேயானால் ஞாயிறு 15 திங்கள் 10 செவ்வாய் 12புதன் சனி4வியாழன் வெள்ளி 8 இவ்வாறு வாரதுருவத்தைக் கூட்டி 9 கழிக்க துருவபஞ்சகமாம் ஞாயிறு ரோகபஞ்சகம் திங்கள் இராஜ பஞ்சகமம் செவ்வாய் அக்கினி பஞ்சகம் புதன் சனிமிருத்தியு பஞ்சகம் வியாழன் வெள்ளி சோரபஞ்சகம் இவ்வாறு வரும் பஞ்சகங்களுக்கும் துருவமில்லை (எ:று) (கூட்டி சேர்த்து)

குறிப்பு:- வாரதுருவத்தோடு பஞ்சகம் ஐந்தெனப்படும், இவையே பஞ்சகிருத்தியங்களாம்,

## 18. இலக்குமி

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

கொள்ளவருங் கெற்பத்தை மூன்றி ஞலே
கூட்டியதோ ரலகதனை யெட்டி ஞலே

தள்லவரு மீவதனி லெண்மராவர்
சாற்றுமபி தானமே ராஜ்ஜியங் கீர்த்தி
யுள்ளதன தான்யமே தைர்யம் வித்தை
யுயர்வான ஜெயவீர மங்கை நல்லார்
விள்ளொணு செல்வமே யதிகங் கொள்வர்
மிடியாகு மைந்தெட்டும் வேடர்க் காமே 72

(பொ-ரை) கெற்பத்தை 3ல், கூட்டி 8ல், கழிக்க வரும் ஈவு 1க்கு, இராஜ்ஜியலக்ஷுமி. 2க்கு கீர்த்திலக்ஷுமி 3க்கு, தனலக்ஷுமி 4க்கு. தானியலக்ஷுமி 5க்கு, தைரியலக்ஷுமி 6க்கு வித்தியாலக்ஷுமி, 7க்கு ஜயலக்ஷுமி 8க்கு வீரிய லக்ஷுமி இவ்வஷ்ட லக்ஷுமிகளால் நீங்காத அதிக செல்வ மடைவார்கள்: ஆயினும் தைரியலக்ஷுமி இவ்விருவரால் தரித்திரமுண்டாம்; இவை வேடருக்காம். எ-று

குறிப்பு.- அஷ்டலக்ஷுமிகளால் இராஜ்ஜியம் கீர்த்தி தனம் தான்யம் தைரியம் வித்தை ஜயம் வீரயம் இப்பல னைத்தருவார்கள், ஆயினும் தைரியலக்ஷுமி வீரியலக்ஷுமி இவ்விருவரும் வேடர் வில்லியர் மறவர் வனசரர் வேட்டை யாடுபவர் அரசர் இவர்களுக்கு விசேஷபலனைத்தருவார்கள் (எ-று)

## 19. தாராபலன்



ஆமேவி ஜென்மநாண் முதலா மற்றை
யலகதனை யொன்பதாற் கழிப்நீ ராயின்
பூமேவு ஜென்மமே சம்பத் தோடு
புகழிலா விபத்ததிக ஷேம மாக
தாமேவு பிரத்தியக் காதி நட்பாம்
நலமிலா வதையோடு மைத்திரம் பரம

தேமேவு தாரமிவை யிரண்டும் நாள்கா
றெட்டுமே நலனுகு மட்டிலா பலனே 73

(பொ-ரை) ஜென்ம நட்சத்திரமுதல்மணையினட்சத்திரம் வரையில் எண்ணியதொகையை9ல் கழிக்க வரும் ஈவு 1க்கு ஜென்மம் 2க்கு சம்பத்து 3க்கு விபத்து 4க்கு க்ஷேமம் 5க்கு பிரத்தியக்கு 6க்கு சிநேகம் 7க்கு வதை 8க்கு மைத்திரம் 9க்கு பரமமைத்திரம் இவற்றில் 4 5 6 8 அளவில்லா நற்பலனைத்தரும்(எ-று)ஜென்மநட்சத்திரமென்பது தலைவன் ஜெனன நட்சத்திரம் அல்லது நாமநட்சத்திரம்.

குறிப்பு:- பிரத்தியக்கு பரமமைத்திரம் இவ்விரண்டும் சுப பலனைத்தருமென்று சொல்வாருமுளர்.

## 20. அதிதேவதை

பலன்கொண்ட வயதையோ ரைந்தி னாலே
பண்பாக்கி யெட்டினால் வகுப்பீ ராயி
னலங்கொண் வதிதேவ ரீச னீருய்
நடத்துவாம் பலனென்ன போகம் வாதை
சவங்கொண்ட மரணமே சுகத்தோ டின்பத்
தனமிக்க செல்வஞ் சந்தோட மெட்டாம்
நிலங்கொண்ட கீட்டிசையோ னாதி யாக
நிகழ்த்திட்டே னகரமுதல் வகுத்திட்டேனே 74

(பொ-ரை) நகரமுதலாயுள்ளவற்றின்வயதை5ல் கூட்டி 8ல், கழிக்க வரும் ஈவு 1-க்கு இந்திரன் இதில் போக சித்தி உண்டாம் 2-க்கு அக்கினி இதில் வாதை உண்டாம் 3-க்கு எமன் இதில் மரணமுண்டாம் 4க்கு நிருதி இதில் சுகமுண்டாம் 5-க்கு வருணன் இதில் இன்பமுண்டாம் 6-க்கு

வாயு இதில் தனமுண்டாம் 7-க்கு குபேரன் இதில் மிகுந்த
செல்வமுண்டாம் 8-க்கு ஈசானன் இதில் சந்தோஷமுண்
டாம்' எ-று

குறிப்பு:- நகரம் கோவில் வீடு தடாகம் கூபம் இவை
களுக்கு அதிதேவதையே பிரதானமாம். அஃதில்லாதது
அன்னியபிந்துமனை எனப்படும்,

---

## நூற்சிறப்பு

---

வகுத்திட்டே னகராதி கூபமீருய்
வந்ததோர் பலனெலா மொளியா வண்ணந்
தொகுத்திட்டேன் முந்நூலின் சூக்ஷ மெல்லாந்
துறைகண்டா ரூடன்மருவு நிலையுங் காண்பா
ருகுத்திட்ட பலபேர்கள் சிற்பஞ் சொன்ன
ருயர்வான நூலென்ப தொன்றுங் காணேன்
குத்திட்ட விந்நூலை நன்னூ லென்ன
விளம்பினர் கலைஞானந் தெளிந்து ளாரே 1

(பொ-ரை) நகரம் கோவில் வீடு தடாகம் கூபம் இவ்
வைந்தின் பலனான சூக்ஷமெல்லாம் யான் சொன்ன வாறறித்
தவர்களே தங்கள் தேகத்தின் தத்துவ நிலைமையையும்அறி
வார்கள், ஆதலால் இந்த சிற்ப நூலைவிட நல்ல நூல் இவ்
வுலகத்தில் வேறொன்றுங்காணேன்: அவ்வாறே பூரணகலை
ஞானமுடையவர்களும் இந்நூலை நன்னூலெனச் சொன்னார்
கள் எ-று

குறிப்பு;- நகரம் கோவில் வீடு தடாகம் கூபம்இவ்வைந்
தின் சூக்ஷமபலனை அறிந்தவர்களே தேகத்தின் தத்துவாதி
களை அறிந்து ஞானம் பெறுவார்கள் (எ-று)

ஆதலால் இந்நூலை சிற்பநூலென்றும் மனை நூலென்

றும் தத்துவ நூலென்று பஞ்சேந்திரிய நூலென்றும் இலக்ஷண நூலென்றும் சொல்லப்படும்.

---

## சமுதாயப் பொருத்தம்

### நிலைமண்டில ஆசிரியப்பா

தெளிந்த கெற்பம் விளம்புந் திக்கிற்
கழிப்பராக்கம் விழிப்புய ரெட்டு
மாதச்செலவே தீதக லொன்பான்
பிறப்பே யோனி மறைப்பின் மூன்று

5. திசையார் கிழமை மிசையே யொன்பான்
வாரந் திதியே கூறி ஞுன்கின்
றிகதி நாளோர் மிகுதியெட்டா
முடுவி னிராசி படுமீ ரீநின்
மதியாங் கிஷமே கதியாம் நான்கு

10. கோளே ஜாதி மீளு மொன்பான்
வேத மாயு ளோதும் நாளிற்
சதமே பூதம் விதமே மூன்று
பொழியே பொறியாம் நெறியே மூன்று
திகையாந் தேவர் பகைசே ரைந்து

15, மதிரக் கடலார் பூதலத் தந்தோ
கூட்டிக் கழித்து நாட்டி வைப்பர்
நேத்திரஞ் சொல்லின் பூத்தரு னிரவி
வாரந் தொட்டே சேரு மெண்ணை
குணத்தாற் கூட்டி யினப் பரி யாதி

20. போக்கி நின்ற தேக்குறும் நாளி
லொற்றை யொன்பான் மற்றைப் பனிரண்
டிரட்டை யாறுங் குறுட்டுக் கண்க

ளென்பர் சூத்திரம் நண்ப ராயுளை
கழிப்ப ரைந்தால் விழுப்பெரும் பருவஞ்

25. செப்பினன் கணமே யொப்பிலா யோகம்
பஞ்சகந் தாரா விஞ்சையர் புதழுந்
27. திருவளர் பொருத்த மிருபதுந் தானே, 76

(பொ-ரை) கெற்பத்தை, (திக்கு 8ல், கழிக்க துருவ கெற்பமாம் ஷை கெற்பத்தை 8ல், கூட்டி மாதம்) 12பு கழிக்க ஆதாயமாம் ஷை கெற்பத்தை 9ல், கூட்டி (பிறப்ல் 10ல், கழிக்க செலவாம், ஷை கெற்பத்தை 3ல்,கூட்டி திசை 8ல், கழிக்கயோனியாம் ஷை கெற்பத்தை9ல்,கூட்டி வாரம்) 7ல், கழிக்க வாரமாம் ஷை கெற்பத்தை 4ல் கூட்டி (திகதி) 30ல், கழிக்க திதியாம் ஷை கெற்பத்தை 8ல், கூட்டி (உடு) 27ல், கழிக்க நட்சத்திரமாம். ஷை கெற்பத்தை 4ல் கூட்டி (மதி) 12ல், கழிக்க இராசியாம். ஷை கெற்பத்தை4ல், கூட்டி (கோள்) 9ல், கழிக்க அங்கிஷமாம் ஷை கெற்பத்தை 9ல் கூட்டி (வேதம்)4ல், கழிக்க ஜாதியாம் ஷை கெற்பத்தை 27ல், கூட்டி(சதம்) 100ல், கழிக்க ஆயுளாம் ஷை கெற் பத்தை 3ல், கூட்டி (பொறி) 5ல், கழிக்க பூதமாம் ஷை கெற் பத்தை 3ல்' கூட்டி (திகை) 8ல், கழிக்க இலக்ஷுமியாம் ஷை கெற்பத்தை 5ல் கழிக்க அதிதேவதையாம் ஆதித்த வாரமுதல் அன்றையவாரம் வரையில் வந்த தொகையை (குணம்) 3ல் கூட்டி அசுபதிமுதல் எண்ணி வந்த நட்சத் திரங்களைத்தள்ளி நின்ற நட்சத்திரங்கள் 9ம் ஒற்றைக்கண்; அப்பால் 12ல், இரட்டைக்கண்; மேல் 6ம் குருடு இவை நேத்திரமாம். ஆயுளை 5ல், கழிக்க சூத்திரமாம். கணம், யோகம் பஞ்சகம், தாரா இவைகளோடு பொருத்தங்கள். 20 (எ;று)

குறிப்பு:- (திக்கு-திசை-8) மாதம். 12) (பிறப்பு ருமாலவதாரம் 10) (திசை 8] (வாரம் 7] [திகதி-தேதி

30] [உடு-நக்ஷத்திரம். 27] [மதி-மாதம், 12) (கோள்: நவக்கிரகம் 9] [வேதம் 4] சதம் 10] [பொறி 5] [திகை திசை 8] [மந்திரம் திசை திசை, 8] [குணம் 3] சமுதாயப் பொருத்தமெனினும் பொருத்தவிளக்கமெனினும் ஒக்கும்



## தலைக்கால் விளக்கம்

.........

எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்,

தான்மேவு நகராதி கூபங் கொண்ட
தலைகாலின் கணக்கொன்று செப்பக் கேண் மின்
வான்மேவு மூன்ருேடு நான்கி ஞலே
வகுத்தவிடை யானதோர் நடுவே யென்பர்
மான்மேவு முடங்கலரி கூடம் வாயில்
மணிவட்டங் கருவிகோ புரமே தெய்வங்
கான்மேவு காலாதி கையு மீருய்
கணித்திட்டேனைத்தினிலை பணித்திட்டேனே. 77

(பொ-ரை) நகரம் கோவில் வீடு, தடாகம்,கூபம்இவை களுக்கமைவிப்பதான கோபுரம் விக்கிரகம், தூண் துவஜம், வாசற்கால், (தாழ்வாரம்-கூடம் மணியின்கோடி அளவு, கதவு முதலிய முளைகடாவல் கைமரம், இவைகளும்: சுவடி மூதலியன துளையிடுதலும்-முதலியவைகளின் ஓர் கடையில் நான்கு ஒரு பாகமும், மூன்று ஒரு பாகமுஞ் செய்து இதின் நடுவுக்குள் நடுவே துளை, முளை கோடி, தூண் துவஜம்; கை, கால் முதலியன அமைத்தலே சுபலக்ஷணமாம் எ-று

குறிப்பு:- மேற்சொன்ன விதிக்குரிய ஆன்ருேர் செய் யுள்.



## கலி விருத்தம்

நாலுக்கு மூன்றுக்கு நடுவுக்கு ணடுவே
காலுக்குங் கதவுக்குங் கம்பைக்கு மிதுவே
மேலுக்குங் கீழுக்கும் நடுவுக்கு முடலா
மோலைக்கு நூலுக்கு முறையொப்ப வையே

"மேற்சொன்னதாழ்வாரம்கூடம் இவற்றின் அடிவிபரம்;"; கூரைவீடுகளுக்குத் தாழ்வாரம் அடி 6 ஆகவும் கூடம் அடி 8 10 ஆகவும், கூடம்அடி 10 11 ஆகவும்மச்சு வீடுகளுக்கு (மெத்தைவீடு) தாழ்வாரம் அடி 10 11 ஆகவும் கூடம் அடி 11. 16 ஆகவும்; மாடமாளிகைகளுக்குத் தாழ்வாரம் 8, 10, 11, 16. ஆகவும் கூடம் அடி 11 16 20 21 ஆகவும் அமைத்தலே நற்பயனைத்தரும் எ-று

.........

## வாசற்கால் வைக்குமிடம்

பணித்தகால் வைத்திடவே கோளி னெண்ணாற்
பகுத்திட்டவாமத்தி லாதி வெய்யோன்
குணித்தமண மகளோடு வீடு மீயான்
குலவுமதி யிந்திரனுர் போகம் ஞானம்
பிணித்ததோ டரவிந்த மகளும் வைகும்
பிறங்குசெந் தீவண்ண னிருளன் பூதம்
கணித்தவிடி மிடியோடு தீயுங் கொள்ளும்
கனமில்லை தனமில்லை யினஞ்சொல் வேனே 78

(பொ-ரை) வாசற்கால் வைக்க மனையை 9, பாகஞ் செய்து, இடது பக்கம் ஆதியாய் முதல் வீடு சூரியன் இதில்

மனைவியோடு வீட்டையுமிழப்பன். 2ம் வீடு சந்திரன் இதில் போகசுகம், ஞானம், இலக்ஷ்மிகடாக்ஷமுண்டாம். 3ம் வீடு செவ்வாய், இதில் இருளன் பூதம் வாசஞ்செய்வது டன் தரித்திரம், இடிவீழ்தல், அக்கினிபயம் இவைகளு முண்டாம் (எ-று)

குறிப்பு:- சந்திரன்வீடு இடக்குறைவுள்ள தாயின் சூரியன் வீட்டிற்சேர்க்கலாமே யொழிய செவ்வாயின் வீட் யற் சேர்க்கலாகாது

சொல்லரிய புதன்வீடு வாசல் கொள்ளின்
சுகமிக்க கனயோக மிந்தர போக
மில்லோடு தனலாப மணையாண் மக்க
ளிந்திரையுங் குடிகொள்வ டேவ மந்த்ரி
மல்லலணி கோவிலோ டாச னில்லம்
வளமேவு நலமிங்க சுகமா மென்பர்
புல்லொணு மற்றவர்க்கே யாகா தந்தோ
பலியுள்ள காடென்ன விளையுந் தானே. 79

(பொ-ரை) 4ம் வீடு புதன், இதில் மிகுந்த சுகத்தோடு இந்திரயோகமும மனையாள், மக்கள், இலக்ஷ்மிகடாக்ஷமு முண்டாம் 5ம், வீடு வியாழன், இதில் கோவில், அரசனில் லம் இவைகளுக்கு மிகுந்த சுகமுண்டாம் மற்றவர்களுக்குப் புலியிருந்த காடென்ன நீங்கு விளைவிக்கும் எ-று

குறிப்பு:- புதன்வீடு இடக்குறைவுளதாயின் வியாழன் வீட்டிற்சேர்க்கலாமேயொழிய செவ்வாயின் வீட்டிற்சேர்க்க லாகாது-வியாழன் வீடு இடக்குறைவுள தாயின் புதன்வீடு முழுமையும் சுக்கிரன் வீட்டிற்கொஞ்சமும் சேர்க்கலாம்,

தானுன வெள்ளிவீ டில்லா ளோடு
தனமழியும் வெகுபழியாங்கனிகை யென்னு

மானுன கண்ணியருங் குடிமை யாயின்
வழங்குவதோர் தாழ்வின்றி வாழ்வே கொள்வ
ளீனுன சனிவீடுங் கேட்பீ ராயி
னிடுகாடு மீதல்ல சுடுகா டென்பர்
வானுன தலைகாலினரவ மந்தோ
மடித்திடும்பா ரிலாவரையும் விடத்தி னுலே. 80

[பொ-ரை] 6ம்; வீடு, வெள்ளி, இதில் தாசிகளொழிந்
மற்றவர்களுக்கு மனைவியோடு தனமழியும். பழியுண்டாம்,
தாசிகளுக்கு மிகுந்த நன்மையும் தாழ்வில்லாத வாழ்வுமுண்
டாம் 7ம் வீடு சனி,இஃது சுடுகாடெனப்படும்8-9ம் வீடுகள்
இராகு கேது இவற்றில் விஷந்தீண்டி இலப்பர்.

குறிப்பு:- சுக்கிரன் வீடு இடக்குறைவுள தாயின்
வியாழன் வீட்டிற் சேர்க்கலாமேயொழிய சனியின் வீட்டிற்
சேர்க்கலாகாது

.........

## வாசற் கால் தூண் இவைகளின் உயரம்

.........

விடமுண்ட கருடனுர் யோனி கண்டால்
விளங்குமடி நான்கோடு முக்காற் சிங்கந்
திடமுண்ட வைந்துபாம் பைந்தே காலாய்
செப்பினுர் கஜமென்ப தைந்தே முக்கா
லிடமுண்ட மனையாதி தனமும் பெண்டீ
ரியல்பான சுதரோடு மாத ரெண்மர்
நடமுண்ட திணையாகு மூவகை கொள்ள
னன்ருன தூணோடு காலென் ருேதே. 81

(பொ-ரை) வேதிகை [திண்ணைத்] தூண்வாசற்
கால் இமைகள் கருடயோனி மனைக்கு 4¾, அடி உயரமும்
சிம்மயோனி மனைக்கு 5, அடி உயரமும்; சர்ப்பயோனி

மனைக்கு 5¼ அடி உயரமும் யானையொனி மனைக்கு 5¾ அடி உயரமுங்கொள்க இவ்வாறமைந்துள்ள மனையில் இடம் பொருள் பேண்டீர், மக்கள் இவர்களோடு அஷ்டலக்ஷ்மி களும் நிர்த்தனஞ்செய்ய மிகுந்தசந்தோஷத்தோடு வாழ் வார்கள் எ-று

குறிப்பு - அடியென்பது - மயன்கோலடியாம் இஃது தலைவன் காலடியாலும் இராஜங்கத்தின் ஜாதி அடியாலும் நகரமுதற்கூபமீயளந்து பொருத்தங் காண்பதுவுமுலக வழக்கத்தில் உள்ளது அவ்வாறு காணின் கோலைக் கொண்டு குழியாக்க வேண்டியிருப்பதாம்-மயன்கோல் 3. கொண்டது அடி 10 ஆதலால் மேற்சொன்ன காலடி அல்லது ஜாதி அடியால் அளந்ததை மயன் கோலால் அளவுபடுத்திக் குழி அல்லது அங்குலமாக்கிப் பொருத்தங் காண்பது உத்தமம். அஃதல்லாத காலடி மத்திபம், ஜாதி அடி அதமமென்றறிக சில இடங்களில் ஜாதி அடியை உத் தமமெனக்கொண்டு அநுஷ்டித்தும் வருகிறுர்கள் ஆதலால் இராஜாங்கத்தின் ஜாதி அடியை உத்தமமெனக் கொள்வ தும் நன்ரும்



## மனைக்காகாத மரங்கள்

.........

ஓதினே னகத்திபனை நாவ லிச்சி
யுயர்வான புளியிலவா மலகம் பன்ன
னீதியா லரசுமகிழ் விளாவு மததி
நிலையான விலந்தைபுர செருக்கோ டான
கோதினுய ரீரெட்டுந் தனமே நட்டங்
கொல்லைக்குப் பல்லியாந் தேவி நில்லாள்
சோதிவின் ணவரோங்கு மரங்காற் பட்ட
துருமமிடு காட்டுகரம் வறுமை யாமே. 82

(பொ-ரை) அகத்தி, பனை, நாவல், இச்சி, புளி, இல
நெல்லி. பருத்தி. ஆல் அரசு, மகிழம், விளாம் அத்
இலந்தை, புரசு எருக்கு, இப்பதினறு மனைக்காவ
இருந்தால் தனநஷ்டமுண்டாகும்,மனையாள் மரணமாவாள்
தெய்வமிருந்தமரம், காற்றில் முறிபட்டமரம் மயானத்
லிருந்தமரம் இவற்ருல் தரித்திரமுண்டாம் (எ-று)

குறிப்பு:- மருதம், ஈந்து, இவ்விரண்டு மனைக்காக
வெனச் சொல்வாருமுளர் இவையல்லாத மரங்களால் வாச
கால் தூண், கைமரம் முதலியவைகளுக்கு இளந்த கீழும்
முது தலை மேலுமாக அதாவது (தலைகீழாக) இசைப்பார
யின் நோயால் வருந்துவார்கள் எ-று

## சுவற்றின், கனமும். உயரமும் அஃது வீழ்தலின் பலனும்

ஆமெட்டோ டிரண்டீருய் கனமே நாலெட்
டாதிகடை யெட்டாக வுயரம் வைப்பாய்
மாமேவு சாணுக நகரங் கோவில்
மன்னரந் தணரோடு வணிகர் பின்ஞேர்
தாமேவு நீசரோ டெழுவர் கோட்டஞ்
சரிந்திடிலோ வெளியாக மன்னன் சாவ
னீண்மேவு மகத்துளே வீழ்ந்தா லந்தோ
நிலையான மனைவிபோங் கலகந்தானே 89

[பொ-ரை] நகரத்தின் மதிள்முதலின-கனம் 8 சாண்
உயரம் 32 சாண் கோவிலின் மதிள்சுவறு முதலியன கனம்
7, சாண்: உயரம் 28, சாண் அரசகர் அரண்மனைச்சுவர
முதலியன-கனம் 6, சாண்; உயரம் 24, சாண் அந்தண

வீட்டுச் சுவறு கனம் 5; சாண்: உயரம் 20, சாண் வைசியர் வீட்டுச்சுவறு கனம் 4. சாண்; உயரம் 16 சரண் சூத்திரர் வீட்டுச்சுவறு கனம் 3, சாண் உயரம் 12 சாண் நீசர் வீட்டுச்சுவறு கனம் 2; சாண்: உயரம் 8 சாண் சுவறு வெளிப்பக்கத்தில் சரிந்து வீழ்ந்தால் மனைவி மரணம் கலக முண்டு எ-று (கோட்டம்-சுவற்றின் பாகம்)

குறிப்பு:- பிராமணர்களுக்கும், அரசர்களுக்கும் 1 சாணு யரமும் 3 சாண் அகலமும்;வைசியர்களுக்கும் சூத்திரர்களுக் கும்-9. சாணுயரமும் 2½ சாண் அகலமும் சங்கர சாதி களுக்கு-8சாணுயரமும், 2 சாண் அகலமும் கொள்வது நல மெனச் சொல்லும் நூல்களுமுள்ளன. சுவர்வைக்கும் போழ்தே வீழ்ந்தால் சோரபயமாம்

.........

## சுவற்றின்-புற்று பிளப்பு இவற்றின் பலன்

.........

தானுகு மிந்திரனு ராதி யாகச்
சனிகடையே யமுதமாம் பிணியே துக்கத்
தேனுகும் நன்மையோ டிலாபம் வாதை
செல்வம்நீட் பாம்பெட்டு நடுவே நட்ட
மானுகும் மிளப்பலால் புற்றே காணின்
வகுத்திட்ட பலனுகு மெய்வாய் கண்ணின்
கோனுகும் பலன்சொன்னே னுசி யென்ற
குறிசொல்வேன் றடாகத்தி னெறிசொல் வேனே84

[பொ-ரை) சுவற்றில்-புற்று, அல்லதுவெடிப்பு கிழக்கே காணில் அமுதம், தென்கிழக்கில் பிணி, தெற்கில் துக்கம்: தென்மேற்கில் நன்மை, மேற்கில் இலாபம், வடமேற்கில் வாதை, வடக்கில்செல்வம்,வடகிழக்கில் பாம்பு கெற்பத்தில்

புற்றெழ நட்டம் இவையுண்டாம் மெய்வாய் கண் என்னும் நகரம், கோவில், வீடு இம்மூன்றின் பலனைச்சொன்னேன் இனி மூக்கென்ற தடாகத்தின் இயல்பைச் சொல்வாம்,எ-று

குறிப்பு:- கெற்பம் நடுத்தானம்

.........

## தடாகம்

சொல்லொணு நகரந்தீ மூலை மேல்பாற்
றுய்யசனி யாகுமுப் பாலி னுன்றி
னல்லநீர்த் தடாகமே கொள்வார் நல்லோர்
நலமிக்க விருபாலி னளவு கூட்டி
வெல்லவரும் பொருத்தமிரு பாலி னன்ருய்
விளங்குமதே சுகமான தடாகங் கண்டா
யில்லோரங்குஞ் செல்வமே யதிக முண்டா
மியல்பான கூபத்தின் செயல்சொல் வேனே. 85

(பொ-ரை) நகரத்திர்-தென்கிழக்கு மேற்கு,வடகிழக்கு இத்திசைகளிலொன்றில்-பொருத்தங்கள் 20ம், பொருந்த தடாகத்தின் இருபக்கங்களிளவைக் குழியாக்கி நற்பல னேடு நிருமிக்கின் சுத்தஜல விருத்தியும், நகரத்திற்குச் செல்வவிருத்தியுமுண்டாம்; இனி கூபத்தின் இயல்பைச் சொல்வாம் எ-று

தடாகத்தின் இருபக்கங்களை அளந்து குழியாக்கி,கெற்ப முதல் அதிதேவதைவரையில் பலனை அறிந்து கொள்ளவும்,

குறிப்பு:- வடகிழக்கு, தென்கிழக்கு உத்தமம்: மேற்கு மத்திபம் இஃது கீழ்நோக்கும் நாளில் நிருமித்தல் வேண்டும் எ-று

## கூபம்

.........

சொல்லரிய மேடமரி வில்லோ டென்று
சொன்னநல் லோரைகற் பாறை சேயும்
வில்லாருங் கன்னிகலை தன்னி ரந்தோ
விடங்குமிடி தண்டோடு நிறைகோற் கும்பல்
பொல்லாத வுவர்நீராய் கடஞ் செந்தேட்
புகலுமீ நன்னீராய் கிடைக்குங் கண்டாய்
நல்லோர்கள் புகழுங்கீழ் நோக்கு நாளி
னடத்துவாய் கூபமொடு தடாகந் தானே 86

(பொ-ரை) மேஷம் சிம்மம், தனுசு இவ்வராசிகளில் கிணறு துறவு, முதலியவை களெடுக்கில் கற்பாறையாம். ரிஷபம், கன்னி, மகரம் இவ்விராசிகளில் நல்லதண்ணீர் உண்டு. ஆயினும் ஜலதரித்திரமாம் மிதுனம் துலாம், கும் பம் இவ்விராசிகளில் உவர் நீராம்,கடகம் விருக்ஷிகம், மீனம் இவ்விராசிகளில் நல்ல ஜலம் விசேஷ மாயுண்டாம், கீழ் நோக்கும் நட்சத்திரங்களில் தாடகம் கூபம், இவைக ளெடுக்க மிகுந்த ஜலமுண்டு எ-து

குறிப்பு:- மேஷம் கற்பாறை ரிஷபம் தண்ணீர் மிதுனம் கடற்கரை கடகம் நீரோட்டம் சிம்மம் கற்பாறை கன்னி தென்வடல்மோழை துலாம் புற்று விருக்ஷிகம் பழங்கிணறு தனுசு வடமேற்கு கிழக்கில் மோழை மகரம் இடிக்கரை, கும்பம் சுக்கான்கல் மீனம் தெற்கே கல் வடக்கே தண்ணீர் என்று சொல்லும் நூல்களுமுள்ளன-

அதோமுகநட்சத்திரங்கள் பரணி, கார்த்திகை, ஆயி லியம், மகம், பூரம், விசாகம், மூலம், பூராடம் பூரட்டாதி, இவற்றில் நிட்சேபம் வைக்கவும் கணக்கு அப்பியாசிக்

கவும் கிணறு துறவு தடாகம் அகழி களஞ்சியம் இவை உண்டு பண்ணவும் கிழங்கு முதலானவை நடவும் நன்ரும் இவையே கீழ்நோக்கும் நாளாம்.

ஊர்த்தமுகநட்சத்திரங்கள்:- ரோகணி, திருவாதிரை பூசம், உத்திரம் உத்திராடம், திருவோணம் அவிட்டம், சதையம் உத்திரட்டாதி இவற்றில் பட்டாபிகம் உத்தியோகம் இராஜதரிசனம், வியாபாரம் ஆபரணம் மெத்தை வாசற்கால் தூண் துவஜம் தோப்பு முதலியனவை வைத்தல் இவைகளுக்கு நன்ரும், இவை மேனேக்கும் நாளாம்

திரியக்முகநட்சத்திரங்கள்:- அசுபதி, மிருகசிரம், புனர்பூசம், அஸ்தம், சித்திரை சுவாதி அனுஷம். கேட்டை ரேவதி யானை வண்டி இவைகளை வாங்கல் பொன்னேர் கட்டல் விதை விதைத்தல் கொட்டாரம் யாத்திரை ஏரி கால்வாய் வரம்பு இவைகளுக்கு நன்ரும். இவையே சமநோக்கும் நாளாம்,

## கூபந்தின் அளவு

தானுன கூபத்தி னளவு சொல்வாந்
தனியான வொன்றேகா ரெட்டு நீண்ட
கானுரு மடியிருபத் தைந்தா மட்டுங்
கணக்கிடுவா யொன்றேகா லொன்றே காலாய்
மானுகுந் தொகையோடுள் ளளவுங்கூட்டி
வந்ததே கெற்பமாம் வட்டங் கொண்டப்
பானுது முந்நீரால் விளங்குங் கூபம்
பரிவான துறவினிலை யுருவீதாமே, 87

(பொ-ரை) கூபம், துறவு, இவைகளின் அளவு அடி $1\frac{1}{4}$ முதல் 25.வரையில் ஒன்றேகால் ஒன்றேகாலாய்க் கூட்டி உள் சுற்றளவின் அடியால் பெருக்கி வருந்தொகையேகெற்பமாம் அந்த கெற்பத்தொகையை கெற்பமுதல்அதிதேவதை வரையில் தனித்தனிவகுத்ததே பொருத்தங்களின் பலனும்

கூபம். துறவு, தடாகம் இவைமுதலியன வட்டமாயின் மேற் சொன்ன அளவே அளந்து பொருத்தங்களை அமைத் துக் கொள்ளவும்; சதுரமாயின் இருபக்கங்களின் அளவால் கூட்டிக்கழித்துப் பொருத்தங்களை அமைத்துக்கொள்ளவு நன்று (எ:று)

குறிப்பு:- 4. அடி கிணறு துறவுகளுக்கு நிகளம் அடி 12.5 அடி கிணறு துறவுகளுக்கு நிகளம் அடி 15, 6 அடி கிணறு துறவுகளுக்கு நிகளம் அடி 18, 7. அடி கிணறு துறவுகளுக்கு நிகளம் அடி 21. 8 அடி கிணறு துறவுக ளுக்கு நிகளம் அடி 24, இவை உலகவழக்கத்தில் உள்ளன

---

## இலக்கினப் பூரணுயுள்

---

தாமேவு நகராதி முகூர்த்தங் கொள்ளிற்
றகரைத்து வருடந் தேட்பத்து கும்ப
மாமேவு பதினைந்து தனுர்நாலைந்து
மகரமுப் பதுமிதுன நாற்ப தாண்டு
தேமேவு மடந்தையம் பதுவாம் ஞெண்டு
திகழாறு பத்தரியேழ் பத்து மீனம்
நாமேவு பத்தெட்டு துலைதொண் ணுறு
நந்தியொரு சதங்கொண்டு வந்த தாண்டே 88

(பொ-ரை) நகரம், கோவில், வீடு, தடாகம், கூபம், இவைகளுக்கு முகூர்த்தாரம்பம்-மேஷமாகில் வருஷம் 5 விருஷிகம் 10 கும்பம் 15, தனுசு 20, மகரம் 30 மிதுனம் 40, கன்னி 50 கர்க்கடகம் 60, சிங்கம் 70 மீனம் 80 துலாம் 90, ரிஷபம் 100, வயது எ-று

குறிப்பு:-ஷ இராசிகளில்சுபக்கிரகங்கள் நிற்கில் வயது 1க்கு 10, அதிகமாகவும்; அசுபக்கிரகங்கள் நிற்கில் வயது 1க்கு 5' குறைவாகவும்இருக்கு மென்றறிக.

## கிரகநாசம்

ஆண்டதலையிரண்டுபனி ரண்டிற் பொல்லா
ரமர்ந்திடினுந் தனத்தோடு விரையம் பாவர்
காண்டிடினும் பாம்புசே யிரவி யோடு
கதித்திடினு மிரண்டாறிற் பாம்பு செவ்வாய்
பூண்டாலு மைந்தாறி யிரவி செவ்வாய்
பகுந்தாலும் பத்தோடு பனிரண்டான
நீண்டதோ ரிடம்பாவர் கூடிற் றிய
நீசமே யைந்திடமும் நாசந் தானே 89

(பொ-ரை] நகரம்; கோவில், வீடு தடாகம், கூபம் இவைகளின் முகூர்த்தாரம்பத்தில் 1, 2, 12ல் பாபக்கிரகங்கள் நிற்கினும் 2. 12ல் பாபக்கிரகங்கள் நிற்கினும் பார்க்கினும்: அல்லது பாம்பு செவ்வாய் சூரியன் நிற்கினும்: 2, 6ல் பாம்பு செவ்வாய் நிற்கினும்; 5, 6ல் சூரியன் செவ்வாய் நிற்கினும்; 10 12ல் பாபக்கிரகங்கள் நிற்கினும்: மேற் சொன்ன 5 இடங்களும் நாசப்படும் (எ:று)

குறிப்பு:- 6, 8, 12ல் கிரகங்கள் நிற்கினும்: அல்லது பகை நீசத்தனங்களில் நிற்கினும் பாபத்துவமுண்டாயினும் சுக்கிரன் மூடம் பெறினும் நகரமுதலைந்திடங்களும் நாசமாம்.



## 50 வயது

.........

தானுன புந்திபுக ருச்ச ரேனுந்
தலையிரவி யோங்கபுக ராக்ஷி யேனுந்
தானுன கேந்த்ரதிரி கோணம் நல்லோர்
தங்கிடினுஞ் சுபரரவ ரைந்தே ழொன்பான்

ருனுன பதினொன்றில் கதிரோ னுச்சந்
தாமேவ லாபத்திலிந்து சுங்கன்
ருனுன வைந்தேழில் வியாழன் மேவ
சதமென்ப ததிற்பாதி வயதென் பாரே 90

(பொ-ரை) நகரம், கோவில், வீடு தடாகம். கூபம் இவைகளின் முகூர்த்தாரம்பத்தில் புதன் சுக்கிரன் உச்சராக நிற்கினும் 1ல்சூரியனும்(ரிஷபதுலாத்தில்)வெளிள்யும்நிற்கினும் கேந்திரதிரிகோணத்தில் சுபக்கிரகங்கள் நிற்கினும், 5, 7, 9ல் சுரக்கிரகங்களும் 1ல் சூரியனும் உச்சமாகநிற்கினும்: 11ல் சந்திரன், சுக்கிரனும் 5 7ல் குருவும் நிற்கினும் மேற்சொன்ன 5, இடங்களுக்கும் வயது 50 எ-று

குறிப்பு:- 4க்குடையவன் ஆக்ஷி உச்சம் பெறினும் வயது 50 எ-று

---

## 100 வயது

---

யாரோங்கு மந்திரிக ளுச்ச ரேனும்
பைங்கதிரோ னந்தனனுங் கேந்த்ர மேனுந்
தாரோங்கு மிலக்கினத்தி லனமச்சர் கூடித்
தனித்ததோர் மூன்றைக்கி லிரவீ யாறிற்
பேரோங்கு சேயேனுங் கெந்த்ரத் திந்து
பேசும்பன் னொன்றில்சனி பொன்னோன் செவ்வா
யேரோங்கு வாரேனுந் திங்கள் பொன்னோ
ளியல்பான வுச்சரெனின் வயது நூறே 91

(பொ-ரை) நகரம் கோவில், வீடு. தடாகம் கூபம் இவைகளின் முகூர்த்தாரம்பத்தில் குரு சுக்கிரன் உச்சராகநிற்கினும், சந்திரன் குரு கேந்திரமேறிநிற்கினும் 1ல் குரு சுக்கிரன் 3 5ல் சூரியன் 6ல் செவ்வாய் நிற்கினும்

கேந்திரத்தில் சந்திரனும், 11ல் சனி குரு செவ்வாயும் நிற்கி லும்: சந்திரன், குரு உச்சராக நிற்கினும், மேற்சொன்ன 5 இடங்களுக்கு வயது 100 எ-று

குறிப்பு:- குருவுக்கு கேந்திரத்தில் சுக்கிரனும் சந்திர னுக்கு கேந்திரத்தில் குருவு நிற்கினும் 8க்குடையவனும் குருவும் இவ்வாறு கேந்திரம்பெறினும் வயது 100 எ-று

.........

## 250 வயது

.........

வயதின்னஞ் சொல்வேன்கே ளுதையம் நற்கோள்
வளர்சோம னிலாபமே யுதையம் பொன்னேன்
ஜெயமேவு மதியைந்தில் புந்தி யொன்பான்
சிதனேங்கு மிலாபமே யுதையஞ் செம்பொ
னயமேவு மைந்தில்மதி பதினேன் ருய
லாபத்தி லாதித்தனுக வைந்தி
லுயர்வான குருபத்தி லிந்து பன்னேன்
ரேங்குசனி வயதிருநூற் யைம்பதாமே 97

[பொ-ரை] நகரம். கோவில், வீடு. தடாகம், கூபம் இவைகளின் முகூர்த்தாரம்பத்தில் 1ல், புதன் வியாழன் வெள்ளி 11ல் சந்திரன் நிற்கினும்: 1ல் குரு 5ல் சந்திரன் 9ல் புதன், 11ல் சுக்கிரன் நிற்கினும் 1ல் குரு 5ல் சந்திரன் 11ல் சூரியன் நிற்கினும்: 5ல் குரு, 10 சந்திரன், 11ல் சனி நிற்கினும்: மேற்சொன்ன 5, இடங்களுக்கும் வயது 250 எ-று

குறிப்பு:- குருவுக்கு கேந்திரத்தில் சந்திரனும் சந்திர னுக்கு கேந்திரத்தில் சுக்கிரனும் நிற்கினும் குரு சந்திரன் 4க் குடையவன் இம்மூவரும் இவ்வாறு கேந்திரம் பெறினும் வயது 250 எ-று

## 500 வயது

தாமேவு முதையத்திற் பளிங்கு மூன்றிற்
சௌமனே பூதகனேன் பானிற் பூர்வ
மாமேவு திங்களுற் ருலும் வெள்ளி
மறையோனும் புதனேடு மாறி னுலும்
பூமேவு குருவெள்ளி யாக்ஷி யாகப்
புதனுச்ச மாயுறினும் வெள்ளி பொன்னேன்
றேமேவு புந்திபதி யாக்ஷியேனுஞ்
செய்யநக ராதிவய தைஞ்னு ருமே

(மொ-ரை) நகரம் கோவில் வீடு தடாகம் கூபம் இவைகளின் முகூர்த்தாரம்பத்தில் 1ல் சுக்கிரன் 8ல் புதன் 9ல் குரு அல்லது பூர்வாதி நிற்கினும்: வெள்ளி குரு புதன் இவர்கள் இடமாறி நிற்கினும் குருவெள்ளி ஆக்ஷியாக புதன்உச்சமேறி நிற்கினும் வெள்ளி குரு புதன் சந்திரன் ஆட்சியில் நிற்கினும், மேற்சொன்ன 6 இடங்களுக்கும் வயது 500 (எ-று)

குறிப்பு:- பூர்வமதிக்குத் திரிகோணத்தில் குருவும் குருவுக்குத் திரிகோணத்தில் 4க்குடையவனு நிற்கினும் குருவுக்குத் திரிகோணத்தில் சந்திரனும் சந்திரனுக்குத்திரிகோணத்தில் சுக்கிரனும் அல்லது 4க்குடையவனு நிற்கினும் வயது 500 (எ-று)



## 750 வயது

.........

ஆமருவு பொன்வெள்ளி யுச்சம் பன்னேன்
ருன்சனி யேனும்நற் புந்தி மந்தன்
பூமருவு உச்சம்பொன் னேக்கி னுலும்

பூர்வமதி யுச்சமா யாச்சி சுங்க
ஞமருவு குருநீச மேனும்பொன்னே
னலமான வத்தமன மாக வெள்ளி
காமருவு தானுச்ச மேனுஞ் சுங்கன்
கதிப்பாக வயதெழுநூற் றைம்ப தாமே. 94

(பொ-ரை) நகரம், கோவில் வீடு தடாகம் கூபம், இவைகளின் முகூர்த்தாரம்பத்தில் குரு வெள்ளி உச்சராக 11ல் சனி நிற்கினும் புதன் சனி உற்சராச குருநோக்கினும் பூர்வமதி உச்சமாக சுக்கிரன் ஆக்ஷியாக குரு நீசமாக நிற்கினும் குரு அத்தனமாக சுக்கிரன் உச்சமாக நிற்கினும் சுக்கிரன் கேந்திரகோண உச்சம் பெறினும் மேற்சொன்ன 5 இடங்களுக்கும் வயது 75 எ-று

குறிப்பு:- பூர்வமதிக்கு கேந்திரத்தில் செவ்வாயும் செவ்வாய்க்கு கேந்திரத்தில் குருவும், குருவுக்கு கேந்திரத்தில் 4க்குடையவனுநிற்கினும் 4க்குடையவனுக்கு கேந்திரத்தில் சந்திரன் செவ்வாயும் சந்திரன்செவ்வாய்க்கு கேந்திரத்தில் சுக்கிரனும் நிற்கினும் வயது 750 (எ-று)

## 1000 வயது

.........

மேலான நால்வரவு ராக்ஷி யேனு
மிகுமைவ ரொருங்கேதா முச்ச ரேனுங்
காலான பொன்வெள்ளி யுச்ச ராகக்
கதிருவ ராக்ஷியாய் நிற்ப ரேனும்
பாலான புந்திமதி யாக்ஷி யாகப்
பளிங்கோடு மறைநாத னுச்ச ரேனு
மாலத்த மனம்பொன்னே னுக்ஷி சுங்கன்
வளருச்ச மேகொண்டால் சகஸ்திர மாண்டே 95

(பொ-ரை) நகரம், கோவில், வீடு, தடாகம், கூபம் இவைகளின் மூகூர்த்தாரம்பத்தில் சந்திரன் புதன் வியாழன்

வெள்ளி இவர்கள் ஞ்க்ஷியாக நிற்கினும்; ஆரியன் செவ்வாய் சனி ராகு கேது இவர்கள் உச்சராக நிற்கினும்:குரு சுக்கிரன் உச்சராக சூரியன் சந்திரன் ஆக்ஷியாக நிற்கினும் புதன் சந் திரன் ஆக்ஷியாக சுக்கிரன் குரு உச்சராக நிற்கினும் புதன் அத்தமனகாக குரு ஆக்ஷியாக சுக்கிரன் உச்சம் பெற்று நிற்கினும். மேற்சொன்ன 5 இடங்களுக்கும் வயது 1000 எ-று

குறிப்பு:- லக்கின கேந்திரத்தில் பூர்வமதியும், மதிக்கு கேந்திரத்தில் குருவும் குருவுக்கு கேந்திரத்தில் சுக்கிரனும், சுக்கிரனுக்கு கேந்திரத்தில் புதனு நிற்கினும், லக்கினகேந்தி ரத்தில் 4க்குடையவன், 4க்குடையவனுக்கு கேந்திரத்தில் செவ்வாய் செவ்வாய்க்கு கேந்திரத்தில் குரு குருவுக்கு கேந் திரத்தில் பூர்வமதி அல்லது சுக்கிரன் நிற்கினும்1000வயது எ-று

.........

## 5000 வயது

.........

ஆண்டளப்ப னுச்சமே யைவ ராக்ஷி
யமர்ந்திடினு மாக்ஷியுள ரெழுவ ரேனும்
பூண்டதோ ருச்சமுள ரைவ ரேனும்
பொன்னேடு புதனத்த மனமே யுச்சம்
நீண்டதோர் புகரெனினு மிராகு கேது
நீங்கலா யெழுவரவ ருச்ச மாக்ஷி
பூண்டாலுஞ் சனியோடு நால்வ ருச்சம்
பொருந்துவரேல் வயதைந்து சரஸ்திர மாமே 96

(பொ-ரை) நகரம், கோவில். வீடு, தடாகம், கூபம் இவைகளின் முகூர்த்தாரம்பத்தில் சுக்கிரன் உச்சமாகவேறு 5, கிரகங்கள் ஆக்ஷியாக நிற்கினும்: 7, கிரகங்கள் ஆக்ஷி

பெறினும்; சுபாசுபர் ஐவர் உச்சராக நிற்கினும் குரு புதன் அத்தமனமாக சுக்கிரன் உச்சமாக நிற்கினும் இராகு கேது நீங்குதலாக மற்றவர்கள் உச்சந் ஆக்ஷிபெறினும் சனியோடு சுபர் நால்வர் உச்சம் பெறினும்: மேற்சொன்ன 5, இடங் களுக்கும் வயது 5000 எ-று

குறிப்பு:- லக்கின கேந்திர திரிகோணத்தில் குரு சந்தி ரன் செவ்வாய் இவர்களுக்கு 7ல் சுக்கிரன் நிற்கினும்: லக்கி னத்துக்கு 4ம் பூர்வமதி குரு செவ்வாய் இவர்களுக்கு 4ல் 4க்குடையவனும் சுக்கிரனும் நிற்கினும் வயது 5000 எ-று

## 10000 வயது

மாமேவு கதிரிருவ ருச்ச ராக
வளர்பொன்னேன் சேயோடு நீசமாய்
பாமேவு முதையாதி பதியே நீசம்
பண்பான வவ்விட்டிற் குடையோ னுச்சந்
தாமேவி யுதையத்தைப் பார்ப்பானேனுஞ்
சனியோடு சேயுருவ ருச்சராகிப்
பாமேவு நீசரா மூவர் தம்மைப்
பார்க்கிலோ வயதுகேள் சகஸ்திரம் பத்தே 97

(பொ-ரை நகரம் கோவில், வீடு, தடாகம், கூபம் இவைகளின் முகூர்த்தாரம்பத்தில் சூரியன் சந்திரன் உச்ச ராக குரு செவ்வாய் நீசராக நிற்கினும் உதையாதிபதி நீச மாக அவ்விட்டிற்குடையோன் உச்சமாகி உதையத்தை அல்லது உதையாதிபதியை நோக்கினும்: சனி செவ்வாய் உச்சராகி நீசரான 3,கிரகங்களைப்பார்க்கினும் மேற்சொன்ன 5, இடங்களுக்கும் வயது 10000 (எ-று

குறிப்பு -கேந்திரிகோணத்தில் பூர்வமதி உச்சம் பெற, மதிக்கு கேந்திரகோணத்தில் குரு உச்சம் பெற

குருவுக்கு கேந்திரகோணத்தில் சுக்கிரன் அல்லது நாலுக்குடையவன் உச்சம்பெறினும்; 1, 4, 7, 10க்குடையவர்கள் உச்சம்பெற்று ஒருவர் ஒருவரைப் பாராவிடினும் வயது 10000 (எ-று)

## குற்றம்

பத்தான குற்றமுள கிணற்றிற் காகாப்
பரிவான திசையோடு நீரி ரண்டுஞ்
சித்தான தடாகமே நிலத்தி னோடு
திடமான விருக்ஷமே நான்கு மாகா
வித்தான நகரமே கடவுளப்பான்
விளங்குநீண் வாயிலோ டாறு மாகா
முத்தான கோவிலே நகரின் கேடி
முறியலோ டெட்டுமே யாகா வந்தோ 93

(பொ-ரை) நகரம், கோவில், வீடு தடாகம், கூபம் இவைகளுக்குக் குற்றங்கள் பத்துள்ளவாம்: அவற்றுள் கிணற்றிற்கு, திசைக் குற்றம் நீர்க்குற்றம் இவ்விருண்டுமாம். தடாகத்திற்கு, திசைக்குற்றம், நீர்க்குற்றம். நிலக்குற்றம்மரக்குற்றம் இந்நான்குமாம் நகரத்திற்கு திசைக்குற்ற நீர்க்குற்றம் நிலக்குற்றம், மரக்குற்றம், தெய்வகுற்றல், வாசல்குற்றம் இவ்வாறுமாம். கோவிலுக்கு திசைச்குற்றம், நீர்க்குற்றம், நிலக்குற்றம், மரக்குற்றய் தெய்வகுற்றம் வாசல்குற்றம் கோடிகுற்றம், முறிக்குற்றம் இவ்வெட்டுமாம் இக்குற்றங்களால் தீங்கு விளைவிக்கும் (எ-று)

குறிப்பு:- திசைக்குற்றம் இராசிகள் 12ன் திசையாம் நீர்க்குற்றம் உவர்நீர், சுவைநீர் என்பதாம் நிலக்குற்றம் வெளுத்தபூமி, தித்திப்பானபூமி, தாமரைப்பூவாசனையுள்ள

பூமி. இவைகளில்கோவில் நிருமிக்கவும், பிராமணுளுக்கு வீடுகட்டவும் உத்தமம் சிவந்த பூமி துவர்ப்புள்ள பூமி குதிரை வாசனையுள்ள பூமி இவைகளில் அரசர் வீடு கட்ட உத்தமம் கருத்தபூமி காரமுள்ள பூமிதரனியவாசனையுள்ள பூமி இவைகளில் வைசியர் வீடுகட்ட உத்தமம் நீலநிறப் பூமி புளி வாசனையுள்ளபூமி அளர்பூமி இவைகளில் சூத்திரர் வீடுகட்ட உத்தமம். இவை அல்லாமல் பொதுவிதி நீங்காத மதுரமும் பரிமளமும் பொருந்திய பூமியில் கோவிலுக்கும் சகலஜாதியாருக்கும் வீடுகட்டில் மகாஉத்தமம் என்பதாம் மரக்குற்றம் மரத்தின் தழையால் ஜலத்துக்குற்றமுண்டாம். இஃதல்லாமல் 82-வது செய்யுளைக் காண்க வாசற்கெதிரில் மரமிருப்பதுங்குற்றமாம்.

தெய்வகுற்றம் தேவர் பார்வையில் வீதியும் வீடுகளு மிருக்கலாகாது.

வாசல்குற்றம் 78 79 80 இச்செய்யுளைக்காண்க வாசற் கலை மறைக்கும்படியாக கைப்பிடிச்சுவர் திண்ணையின் தாழ் வாரவாரி இவைகளை வைக்கலாகாது.

கோடிகுற்றம் கோடிமனை மனையின் மூலைவட்டம் இவை களாம்.

முறிக்குற்றம்-குழிமுறியலாம்

அந்தமுள விட்டிற்கே முகட்டி ஞேடு
அசுபமுள சல்லியமே பத்து மாகா
தந்ததோர் பத்தென்னுங் குற்றமந்தேர
சனியான துன்பமா மக்கள் பெண்டீர்
விந்தையுள தனலாப மில்லை கண்டாய்
வீடுமுத லெல்லாத தாள் பாழாய்ப் போகுஞ்
சந்ததமுங் வியாதியொடு கடனுக் குள்ளாய்ச்
சாவரென முன்னோர்கள் சாற்றினரே 99

[பொ-ரை] வீட்டிற்கு மேற்சொன்ற 8 குற்றங்களோடு முகட்டுகுற்றம் சல்லியக்குற்றம் இப்பத்தும் ஆகாவாம்: இக் குற்றங்களால் மக்கள் பெண்டீர் தனம் வீடு இவைகளழிந்து வியாதியும் கடனும் அதிகப்பட்டு துன்பத்தாலிறப்பார்கள் எ-று

குறிப்பு:- முகட்டுக்குற்றம் முகடுபொருதுதல் முகடு ஏற்றம் தாழ்த்தி இவைகளாம்,

சல்லியக்குற்றம் புசுண்டர் சல்லிய நூலிற் காண்க

## சிற்பாச்சாரியன் அடையும் பயன்

.........

சாற்றுணப் பஞ்சாங்க முகூர்த்தங் கண்டே
சரியான கிரகத்தி னேக்கம் பார்த்து
ஏற்றதோர் குற்றக ணீக்கி நல்ல
வியல்பான நகராதி கூப மீருய்
மாற்றுணப் பொருத்தமொடு நிமித்தங் கண்டு
வகுத்ததோர் சிற்பனவனிந்த்ரன் போலே
யேற்றதோர் வாழ்வுள்ள மஃதே யில்லா
னிடிவீழ்ந்த மரம்போலே குடியும் பாழாம் 100

[பொ-ரை] நகர கோவில் வீடு தடாகம் கூபம் இவை களுக்கு வாரம் திதி நட்சத்திரம் யோகம் கரணம் இவை களும் முகூர்த்தகாலம் கிரகபார்வை இவை முதலானவை களின் சுபா சுப பலனைப் பார்த்து 10 குற்றங்களும் நீக்கி பொருத்த நிமித்தத்தோடு நற்பலனைக்கண்டு மேற்சொன்ன 5 இடங்களையும் நன்முகூர்த்தத்தோடு நிருமிக்கும் சிற்பனே இந்திரன் போல சுகபோகங்களை அனுபவித்து சுவர்க்க மடைவன் அவ்வாறு நிருமிக்காத சிற்பன் இடி வீழ்ந்தமரம் போலே அவன்குடியும் பாழ்படும் (எ-று)

குறிப்பு,- இந்நூலில் அதிக விற்பத்தியும் தெய்வ பத்தியுமுள்ளவனே சிற்பாச்சாரியனுவான் எ-று

## வாழி

.........

குடியோங்கும் நகராதி கூப மீருய்க்
கொண்டதல மெந்நாளும் வாழி வாழி
மிடியிலா சிற்பநூ லளித்தோ ராய
விருடியர்க ளெந்நாளும் வாழி வாழி
டிவோங்கு நகராதி யறிந்தோ ராய
வளமான சிற்பரவர் வாழி வாழி
படிமேவு காக்கேயன் சிற்பம் வாழி
படித்தோர்க ளெந்நாளும் வாழி வாழி 101

(பொ-ரை) நகரம், கோவில், வீடு, தடாகம் கூபம் இவைகளடங்கிய உலகமும், சிற்பநூலைப் பாடியமாரிஷி களும், சிற்பநூலின் பலாபலன்களை தெரிந்து நடத்தும் இந்த சிற்பநூலும், இந்நூலைப்படித்தவர்களும் நீடூழிவாழக் கடவார்கள் (எ-று)

குறிப்பு:- சிற்பநூலைச்சொன்னவர்கள் பிர்மா. இந்திரன் எமன், சுக்கிரன், பிரகஸ்பதி, வசிஷ்டர் பிருகு. காக்கையர் ஜெயமுனி வியாசர், மனு, விஸ்வகர்மா, இப்பன்னிருவர்களு மாம். [காக்கையர்-புசுண்டர்]

காக்கையர்

சிற்பம்

மு ற் றி ற் று,



# புசுண்டர் சல்லியம்

## கடவுள் வணக்கம்

### வஞ்சி விருத்தம்

ஆதிபூதலன்
வேதநாயகன்
சோதியாம்புய
பாதங்காப்பதே,

# நூல்

## முகூர்த்தம்

### எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

அழகுள்ள கிழமையோடு திதிநா ளியோக
மரிதான கரணம்பஞ் சாங்கமென்பா
விழைவுள்ள திவியாதி கிரகநோக்கும்
விளங்கவே மாசெலாம் போக்கிக் கண்டி
பழியிலா முகூர்த்தமே நகர மாதி
பண்பான வைந்திடமுங் கொள்வீ ராயி
னழிவிலாச் சுகபோக ஞான மெய்தி
யன்பினராய் வாழ்வருய ரின்பத் தோடே 1

(பொ-ரை) வாரம் திதி நட்சத்கிரம் யோகம் கரணம் இவ் வைந்துமே பஞ்சாங்கமாம்: இவற்ருேடு தியாச்சிய முதலியன நல்ல முகூர்த்தகாலத்தில் நகரம் கோவில் விடு தாடாகம் கூபம் இவைகளுக்கு முகூர்த்தாரம்ப முதலியன செய்யின் நீங்காத வாழ்வோடு ஞான இன்பத்தை அடைவார்கள்.

குறிப்பு:- காக்கையர்சிற்பம் 17-வது செய்யுளையும் பார்த்து முகூர்த்தம் கொள்வதே நன்று எ-று

## வாசல் சலதாரை சூரியசந்திரவாஸ்துமுற்றம்

ஓடுகீழ் மேற்பக்கந் தெற்கே யாதி
யுத்தரமுந் கெக்ஷணமுங் கிலக்கே யாதி
நீடுசீர் வாசலாங் கிழக்குத் தெற்கு
நிருதியோ டநிலமே வடக்கோ ரைந்துங்
கூடுசல தாரைநன் றிரவி வாஸ்துக்
குலமான சூத்திரர்க்கா மிந்து மந்து மற்றோர்
தேடுசீர் முற்றமே பொருத்தத் தோடு
செய்குவார் நவநிதிகொண் டுய்கு வாரே 2

(பொ-ரை) கிழக்கு, மேற்குசாரியான மனைகளுக்கு தெற்கே சூரியனை ஆதியாகக் கொண்டளந்து வாசல்வைக் கவும் வடக்கு, தெற்கு சாரியான மனைகளுக்கு கிழக்கே சூரியனை ஆதியாகக்கொண்டளந்து வாசல்வைக்கவும் கிழக்கு, தெற்கு. தென்மேற்கு வடமேற்கு, வடக்குஇத்திசை களிந்திலொன்றில் ஜலதாரை வைக்கில் நன்றும் சூத்திரர் களுக்கு சூரியவாஸ்து முற்றமும் முதற் 3 வருணத்தார் களுக்கு சந்திரவாஸ்து முற்றமுங் கொள்க முற்றம் இரு சாரியை அளந்து பொருத்தங்களோடமைக்கில் குபேர சம் பத்தோடு வாழ்வார்கள் (எ-று)

குறிப்பு:- வாசற்கால் வைப்பது இதிற்சொன்னவண் ணம் பெரும்பாலும் உலகவழக்கத்தில் உள்ளன வாசற்கால் 1, 3, 5 7, 9, 11, 13, இவ்வாறு ஒற்றைப்படை எண் களோடிருக்கவேண்டும், இவற்றின் பலன் 1 ஆயுள் விருத்தி 3: செல்வம், 5, இலக்குமிவாசம் 7, தனவிருத்தி:9 புத்திர விருத்தி, 11 ஞானம் 13: தருவிருத்தி

வாசற்கால்—2; மரத்தாற் செய்யலாகாது

வாசற்கால் 7; சாணீளம் 3 சாணகலமும்: 9 சாணீளம் 5 சாணகலமுமுள்ள அரிகால்வைத்தல் உத்தமமெனச் சொல்லும் நூல்களுமுள்ளன.

தெருவாசற்படி உயர்ந்து கொல்லை (புழைக்கடை) வாசற்படி தாழ்ந்திருக்கலாகாது இருந்தால் வரும்பலன் அழிந்துயோம்

கதவு, நகரம் கோவில் இவற்றிற்கு இரட்டைக் கதவாக வும் வீடுகளுக்கு ஒற்றைக்கதவாகவும் அமைதல் நன்ரும்.

கதவுகளுக்கு பலகை 1, 3, 5 ஆக அமைக்கவேண்டும் இரட்டைப்பலகை சேர்க்கலாகாது வாசற்காலுக்கு இடது பக்கம் கதவு வைக்கவேண்டும்

கதவுகளுக்கு வலதுபக்கம்! தாட்பாள் [கெடை]
பூட்டுத்திறவுகோல் அமைத்தல் உத்தமம்

மூற்றம் பிர்மக்ஷத்திரியர்களுக்கு நாற்சதுரமாக அக்கினி வாஸ்து முற்றமாக அமைக்கினும் பொருத்தும் கீழ்மேல் நிகளமுள்ளதை சூரியவாஸ்து முற்றமென்றும் தென்வடல் நிகளமுள்ளதை சந்திரவாஸ்து முற்றமென்றுஞ் சொல்லப் படும் சூரியவாஸ்து; சந்திரவாஸ்து அக்கினிவாஸ்து இவை அல்லாதது குழி மூறியலாம்

பார்வைக்குற்றம்: நிலக்குற்றம்

வாருண்ட வாசலெதி ரான குற்றம்
வகுத்திடுவாம் தேவரொடு கூபஞ் சந்துப்
பேருண்ட மயானங் காற், றூலங் கட்டைப்
பிழைகாணு மிவையேழாற் றலைவன் மாய்வன்
மேருண்ட கோவிலுயர் கும்ப மூக்கில்
விளாவோடு புளிநாவ னீழல் கொண்ட
தாருண்ட வீடுமணை யலகை வாழுந்
தடமென்பர் மூதேவி யிடமென் பாரே 3

(பொ-ரை) வாசலுக்கெதிரானபார்வையிலுள்ள குற்றங்களாவன தெய்வம், கிணறு துறவு முதலியன சந்து (சிறுவீதி நாராசமுதலியன) மயானம், தூண், தூலம் உத்தி முதலியன (கட்டை தண்டியக்கட்டை போதியக்கட்டை இணைப்புமுறிக்கட்டை முதலியன) இவ்வேழுக்குற்றங்களால் தலைவன் சாவன் கோவில் ஸ்தூபி, மூங்கில் விளா, புளி நாவல், இவைகளின் நிழல்-வீடு மனை முதலானவைகளிற் பட்டால் அவ்விடங்களில் பேயும் மூதேவியும் வாசஞ்செய்யும் (எ-று)

குறிப்பு:- இருசாரி வீடுகளிலுள்ள வாசற்கால்கள் ஒன்றுக்கொன்று நேர்பட்நிற்கினும் குற்றமாம்.

## அங்குலமறிய

.........

பாரோங்கும் நகராதி கூப மிருய்ப்
பண்பாக வளந்த நாற்புறமுங் கூட்டித்
தாரோங்கும் மயன்கோவின் மூவெட்டாய்
தனித்தவங் குலத்தாலே குணனஞ் செய்தா
ஞரோங்கும் விரற்கடையு மொற்றை யாக
நலமேவுந் தொகையதனின் பொருந்தங் கண்டே
பாரோங்குஞ் சுகமெய்தி வாழ்வார் சூக்ஷம்
பழிப்பில்லை தூலந்தான் குழியென் பாரே, 4

(பொ-ரை) நகரம் கோவில், வீடு, தடாகம் கூபம்இந்த இடங்களை ந்தி லொன்றின் நாற்புறமுமளந்து அத்தொகையை ஒன்றுபடக் கூட்டி மயன்கோல் அங்குலம் 24ல் பெருக்கி வந்த தொகை ஒற்றைப்படையாகவும் பொருத்தங்கள் நன்மையுளவாகவும் பார்த்து நிருமித்தல் நன்றும் இஃது அங்குலப் பொருத்தமாம் அங்குலம்சூக்ஷமம் குழிஸ்தூலம் எ-று

குறிப்பு;- இராஜாங்கத்தின் ஜாதி அடி அங்குலமும் வீட்டெஜமானன் கைவிரல் அங்குலமுங் கொள்வாருமுளர்

## கிரகசார்ரபலன்

———

பாருற்ற கிருந்திகைநாட் சகடச் சோற்றிற்
பரிதியுறி ளுசமா மகமே யத்தந்
தாருற்ற கிருத்திகைநாட் பூரம் மூலந்
தையோடு கடைநாளிற் செவ்வாய் நிற்கி
னேருற்ற புத்திரர்க ளுசம் பாம்பா
னின்றகோ ருடுவிற்குப் பதினுன் காய
பேருற்ற நாளென்னிற் கால ளுலே
பிள்ளையோடு கருத்தனுமே மரிப்பன் ருனே 5

(பொ-ரை) கிருத்திகை ரோகணி பரணி இந்த நட்சத்திரங்களில் குரியனிற்கஷெ நட்சத்திரங்களில் முகூர்ந்த முதலியனசெய்யின் அழிவுண்டாகும் மகம், அஸ்தம்,கிருத்திகை பூரம் மூலம் பூசம், ரேவதி இந்த நட்சத்திரங்களில் அங்காரகனிற்க ஷெ நட்சத்திரங்களில் முகூர்த்தமுதலியனசெய்யின் புத்திரர்கள் நாசமாம். இராகு கேது நின்ற நட்சத்திரங்களுக்கு 14வது நட்சத்திரம் மிருத்தியுவானதால் அதில் முகூர்த்த முதலியன செய்யின் புத்திரரும் தலைவனு மிறப்பார்கள் (எ-று)

குறிப்பு:- சூரியனுல் அக்கினிப்யம், சுரநோய் பிதிர் வர்க்க நாசம் இவை உண்டாம் அங்காரகனுல் சகோதர நாசம் பூமிநாசம் இவை உண்டாம் மிருந்தியு வேதையால் பிள்ளையுந்தந்தையுமிறப்பார்கள். (எ-று)

தானுன சோதிசெக் கனுடம் பூரட்
டாதியுத் திரட்டாதி பரணி கேட்டை

